# ஹஸ்தாமலகீயம்

(நாடகம்)

Dr. V. S. மணி அய்யர்
கிருஷ்ணபுரம்



இடமிருந்து வலமாக:
ஸ்ரீ பத்ம பாத ஆச்சார்யர், ஸ்ரீ தோடகாச்சார்யர்
ஸ்ரீமத் ஜகத்குரு ஆதி சங்கராச்சார்யர்
ஸ்ரீ ஹஸ்தாமலகாச்சார்யர், ஸ்ரீ சுரேஸ்வராச்சார்யர்

ஸ்ரீ வேம்பய்யர் சாஸ்வத தர்ம சாஸனம்
கிருஷ்ணபுரம், கடையநல்லூர்.

பகவத் பாதாள் ஸ்ரீ ஆதிசங்கரரின் சிஷ்யர்களில் பிரசித்திபெற்று விளங்கிய ஸ்ரீ ஹஸ்தாமலகாசாரியர் சங்கராத்வைதம் தழைத்தோங்க மேற்கொண்ட பணியினை விஸ்த்தரிக்க இயலாது. தமது பரமார்த்த குருவின் போதனையை ஆஸ்த்திகப் பெருமக்களுக்கு மிகவும் சிலாக்கியமான முறையில் எடுத்தளித்த பெருமை இன்னாரைச் சாரும். "ப்ரும்ம ஸத்யம், ஜகத்மித்யா" (பிரும்மமே மெய்; உலகு பொய்) என்ற மாய வாதத்தின் உட்கருத்தினை ஸ்ரீ ஹஸ்தாமலகர் செவ்வனே விளங்க வைத்தார்.

இத்துணைக் கீர்த்தி வாய்ந்த மஹானின் வாழ்க்கைச் சித்திரத்தை 'ஸ்ரீஹஸ்தாமலக்யம்' என்ற பிரசுரத்தின் மூலம் தெளிவாக வரைய முற்பட்டுள்ள ஸ்ரீவேம்பய்யர் ஸாஸ்வத தர்ம ஸாஸனத்திற்கு என்பீல்ட் இந்தியா நிறுவனத்தோர் தங்கள் பிரார்த்தனை தோய்ந்த பாராட்டினை ஈண்டு பணிவுடன் சமர்ப்பிக்கின்றனர்.

**The Enfield India Limited**
29, Eldams Road
Madras-600 018

# ஹஸ்தாமலகீயம்

(நாடகம்)

Dr. V. S. மணி அய்யர்

கிருஷ்ணுபுரம்

ஸ்ரீ வேம்பய்யர் சாஸ்வத தர்ம சாஸனம்

கிருஷ்ணுபுரம், கடையநல்லூர்.

# பொருளடக்கம்



## ஸ்ரீ ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்தஸ்வாமிகளின் அருளாசிச் செய்தி

---

மெய்ஞானம் மெலிந்து அக்ஞானம் மேலோங்கிய இதுசமயம் நல்லறிவும், நல்லொழுக்கமும், நல்லமனமும், நிறைந்தவரும், அன்பையும் பண்பையும் தமக்கு ஆபரணமாக்கிக் கொண்டவரும், மேன்மக்களின் பாரம்பர்யத்தில் வந்துள்ளவரும், ஸ்ரீ தக்ஷிணாம்னாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடாதிபதிகளான ஸ்ரீ ஜகத்குருவினிடத்தில் அசைக்க முடியாத சிரத்தாபக்தி உள்ளவரும், ஆஸ்திகோத்தமரு மான திருநெல்வேலி ஜில்லா கிருஷ்ணாபுரம் மிட்டாதார் ஆஸ்திக தர்மபூஷணம் டாக்டர் V. S. மணிஅய்யர் அவர்கள், தமிழகத்தி லுள்ள மேன்மக்களான ஆஸ்திகோத்தமர்கள் யாவரும் தம் அகத் துள்ளேயுள்ள அழியாததத்வம் கடவுள் (ஆன்மா)தான் என்பதை உறுதியாக நன்கு தெரிந்து கொள்ளவேண்டுமென்ற பேராவலினால் கடினமான வேதாந்தங்களை (உபநிஷத்துக்களை) பாமரரும் பண்டி தரும் நன்கு புரிந்து கொள்ளும்படி எட்டு உபநிஷத்துக்களின் கருத்துக்களை நாடக ரீதியில் இனிய தமிழில் எழுதி ஸ்ரீசங்கர கிருபாபத்திரிகையில் பிரதிமாதம் வெளியிட்டுவந்துள்ளதை எல்லாம் ஒன்று சேர்த்து ஒரே புஸ்தகமாக ''உபநிஷத் நாடக மாலா'' என்ற பெயரில் 1974-ம் வருஷம் ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீவிலாஸ் பிரஸ்ஸில் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள்.

பின்னால் டாக்டர் V. S. மணி அய்யர் அழகான தமிழில் அற்புதமான நாடகமாக எழுதிய ஹஸ்தாமலக சரித்திரம், புதுக் கோட்டை அதிஷ்டானத்தில் ஸ்ரீபுவனேச்வரி சாரிடி டிரஸ்டின் ஆதர வில் நடைபெற்று வரும் ஸ்ரீபுவனேச்வரி விஜய பத்திரிகையில் பிரதிமாதம் வெளிவந்துள்ளது. இப்பொழுது மக்கள் நலனொன்றையே முக்யமாகக் கருதி இவர் ஹஸ்தாமலகீய நாடகத்தை ஒன்று சேர்த்து புஸ்தக வடிவில் கொண்டுவருவது தமிழ் அறிந்த உத்தமர் கள் அனைவருக்கும் ஒரு புனிதமான மஹாபிரஸாதமாகுமென்று தான் சொல்ல வேண்டும்.

சிறுவயதில் ஜடமாக பைத்தியம் போல் இருந்த பிள்ளையை தாய் தந்தையர்கள் ஜகத்குரு ஆதிசங்கராசார்ய ஸ்வாமிகளிடம் அழைத்துச் சென்று, இந்த முழு அசட்டுப்பிள்ளையை அநுக்ரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தவுடன் ஆதிஆசார்ய ஸ்வாமிகளவர்கள்

பேசாமலே இருந்தவனைக் கூப்பிட்டு ஆசீர்வதித்துக் கேட்கும் பொழுது அ ந் த ச் சி று வ ன் சொன்ன 12 சுலோகங்கள்தான் ''ஹஸ்தாமலகீயம்'' எனப்படும் அபூர்வமான வேதாந்தஸார மனைத்தும் நிறைந்த நூலாகும். இந்த நாடகத்தில் இந்த 12 சுலோகங்களின் கருத்துக்களை விரிவாகக் காணலாம்.

ஜடமாக, பைத்தியமாக இருந்த சிறுவனை அநுக்ரகித்துத் தடுத்தாட்கொண்டவுடன் ஜகத்குருசங்கரபகவத் பாதாளான ஆசார்ய ஸ்வாமிகள் 'ஹஸ்தாமலகர்' என்ற நாமத்தினுல் சிறுவனை யழைத்தார்கள். பின்னுல் ஆதிசங்கரர் ஹஸ்தாமலகரை பூரிஜகந்நாதத்தில் பூர்வாம்னுயபீடாதிபதியாக நி ய மி த் தா ர் க ள் என்பது யாவருமறிந்ததே.

உலகில் மனிதப் பிறவி எடுத்ததன் குறிக்கோள் இம்மையில் தனக்குள் சென்று தன்னை உணர்ந்து கொள்வதிலேயே தமது முழு மனதையும் செலுத்துவதுதான். அழிவற்ற ஆன்மா (கடவுள்) தனக்குள் தானுகவே ஸத்யமாக, ஞானமாக, ஆனந்தமாக அங்கிங்கெனுதபடி எங்கும் நிறைந்ததாக எல்லையற்றதாக இருப்பதை மனிதன் மறந்து விட்டு அழிவுள்ள வஸ்துவையெல்லாம் உண்மை என நம்பிக்கொண்டு மனிதகுலத்தையே கெடுத்துக்கொண்டு, அதாவது தானும் கெட்டு பிறரையும் கெடுத்து வருவது உலகில் எல்லோருமே நன்கறிந்த விஷயமாகும்.

நல்ல தூய்மையான வெண்திரையில் காட்டப்படும் திரைப் படத்தைப் பார்ப்பதிலும், அதைக் கண்டு அழுவதிலும் சிரிப்பதிலும் மிகுந்த விருப்பத்துடன் மக்கள் ஈடுபட்டுள்ள இக்காலத்தில் மக்களின் நலனைக் கருதி திரைப்படம் எடுக்கும் ரீதியில் அழகாகவும் ஆச்சர்யப்படும்படியாகவும் உபநிஷதங்களை நாடகங்களாக்கித் தந்து கொண்டிருக்கும் கொடைவள்ளலான டாக்டர் V. S. மணி அய்யர் அவர்களின் தொண்டினை நினைத்து நினைத்து ஸந்தோஷப் படுகிறேம்.

தற்சமயம் நமது நாட்டுக்குச் செய்யவேண்டிய மிகப் புனிதமான தொண்டு மக்களைத் தட்டி எழுப்பி ஹே பகுத்தறிவுள்ள மனிதா! நீ அழிவற்றவன் உண்மையான கடவுள் உனக்குள்ளிருக்கும் உனது ஆன்மாவேயாகும் உனக்குள் சென்று உண்மையை நீ உணர்ந்து கொள்வதே உனது உண்மையான கடமையாகுமென்பதையெல்லாம் உபதேசித்துவரும் உபநிஷதங்களை பாமரரும்

புரிந்து கொள்ளும்படி தமிழில் எழுதி வெளியிடுவதுதான் என்பதை நன்கு உணர்ந்த தொண்டர் டாக்டர் V. S. மணி அய்யர் ஒருவரே யாவார் என்றுதான் சொல்ல வேண்டும்.

மனிதன் பிறக்கும்போது திகம்பரனுகத்தான் பிறக்கிருன் முடிவில் உயிருள்ள மக்கள் செத்தவனை திகம்பரமாக்கித் தீயிலிட்டுப் பொசுக்கி விடுகிருர்கள். பிறப்பிற்கும் இறப்பிற்கும் நடுவில் பகுத்தறிவுள்ள மனிதன் உலக நாடகத்தில் வேஷம் போட்டு நடித்து வருகிருன். பகுத்தறிவுள்ள மேன் மக்கள் பிறப்பு இறப்புகளின் ரகஸியத்தை நன்கு தெரிந்து கொண்டு நடுவில் அனைத்துமே மித்யை என்ற உண்மையை நன்கு புரிந்து கொண்டு பற்றற்ற மனத்துடன் இறைவன் தனக்குக் கொடுத்துள்ள கடமைகளையெல்லாம் உலக நாடகமேடையில் நன்கு திறம்பட நடித்து நிறைவேற்றிக் கொண்டு தனக்குள் தானுகவே உள்ள ஆத்மானுபவத்தில் அதாவது தான் அழிவற்றவன், உலகம் அழிவுள்ளது என்பதைத் தெரிந்து கொண்டு தனதான்மாவோடு (கடவுளோடு) இரண்டற்றிருந்து வரவேண்டுமென்பதை உணர்த்தவல்லவைகளே உபநிஷதங்களெனப்படும் வேதாந்தங்களாகும்.

இத்தகைய கடினமான வேதாந்தங்களை (உபநிஷதங்களை) எல்லாம் பாமரரும் புரிந்து கொள்ளும்படி தமிழில் நாடகமாக்கிக் கொடுப்பவர் தற்சமயம் தமிழகத்தில் ஒருவர் இருக்கிருர் என்ருல் அவர் டாக்டர் V. S. மணி அய்யர் அவர்களேயாகும். வேதாந்த ஸாரத்தை உணர்த்துகிற மற்ற நூல்களையும் தமிழகத்தின் நன்மையைக் கருதி நாடகமாக்கிக் கொடுத்துக் கொண்டு அதன்மூலம் ஆஸ்திகதர்மபூஷணம் டாக்டர் V. S. மணிஅய்யர் அவர்கள் ஜனகர் போல தான் தானுகவே இருந்து கொண்டு அழிவற்ற ஆத்மானந்தத்தில் திளைத்துக் கொண்டிருக்கவேண்டுமென்று மேலும் விசேஷமான ஆசீர்வாதத்துடன் அனுக்ரகிக்கிருேம்.

சுபம்.

**ஸ்வாமி சாந்தானந்தா**



**ஸ்ரீ C. வேம்பய்யர்**

ஸ்தாபகர்

ஸ்ரீ வேம்பய்யர் சாஸ்வத தர்ம சாஸனம்

கிருஷ்ணபுரம்

# முன்னுரை

டாக்டர் V. S. மணி அய்யர் எழுதியுள்ள 'ஹஸ்தா மலகீய நாடகம்' ஸ்ரீசங்கர பகவத்பாதரின் சிஷ்யரான ஹஸ்தாமலகாசார் யாரின் சரித்திரத்தைப் பற்றியது. பல வருஷங்களாக ஜடன் போலும் ஊமை போலும் நடித்து ஸ்ரீசங்கரபகவத்பாத ஸந்நிதி யில் முதன் முதலாக வாயைத் திறந்து அவருடைய கேள்விக்கு பதிலாக முகத்திலிருந்து வெளிவந்த 12 சுலோகங்களில் உள்ளங் கை நெல்லிக்கனி போல் உபநிஷத்ஸாரத்தைக் காட்டியிருப்பதால் இவருக்கு ஹஸ்தாமலகர் என்ற பெயரும், அந்த சுலோகங்களுக்கு ஹஸ்தாமலகீயம் என்ற பெயரும் ஏற்பட்டது.

ஸாதாரணமாக நாடகங்களில் கதாபாகம் அதிகமாகவும் நீதிநெறிகள் சுருக்கமாகவுமிருக்கும். ஆனல் ஸ்ரீ V. S. மணி அய்யர் தான் முன்னுல் எழுதிய உபநிஷத் நாடகங்களில் போலவே இதி லும் கதாபாகத்தை சுருக்கமாகவும், தத்வவிளக்கங்களை அதிகமாக வும் காட்டியுள்ளார். அதிலும் உபநிஷத் நாடகங்களில் குருவை யும், சிஷ்யர்களையும் நாடக பாத்திரங்களாக கற்பித்து குருமந்திரத்தின் பொருளை உபதேசிப்பதையும் சிஷ்யர்கள் தனித் தனியாக பல பிரச்னங்களை கேட்பதையும் குரு எல்லாவற்றுக்கும் ஸமாதானம் கூறி மந்திரத்தின் கருத்துக்கள் முழுவதையும் விளக்கிக் காட்டுவதையும் காணலாம். அதுபோலவே இந்த நாடகத்திலும் ஹஸ்தாமலகீய சுலோகங்களுக்கு விரிவான கருத்துக்களைக் கூறி ஸ்ரீ சங்கரபகவத்பாதர் சிஷ்யர்களின் கேள்விகளுக்கு ஸமாதானம் கூறுகிருர். நடுநடுவே பத்மபாதரும், ஸுரேசுவரரும் விளக்கங்கள் கூறுகிருர்கள். அலுப்புத் தட்டாமலிருப்பதற்காக நடுவில் பொருத்த மான கதைகளையும் வர்ணித்திருக்கிருர். ஸ்ரீசங்கரர் எழுதிய ஹஸ்தா மலகீய பாஷ்யத்தின் கருத்துக்களை இதில் காணலாம்.

இது தவிர பிரஹ்மஸூத்ரபாஷ்யத்தில் ஆனந்தமயாதிகரணத்தி லுள்ள விஷயம் முழுவதும் ஒவ்வொரு ஸூத்ரத்திற்கும் பொருள் கூறி நிரூபிக்கப்பட்டுள்ளன. அதில் போலவே முதலில் ஆனந்த மயன் பிரஹ்மம் என்ற விருத்திகாரமதத்தை பிரபாகரர் கூற பின்னுல் ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இந்த மதத்தில் தோஷங்களைக் கூறி ஆனந்தமயன் ஜீவன், இதுவும் கோசமே. இதிலுள்ள உபாதி களையும் விலக்கினுல் ஜீவஸ்வரூபம் சுத்தமாகி ஆநந்தமயனுக்கு ஆதாரமான பிரஹ்மஸ்வரூபமாக விளங்கும் என்ற உபநிஷத் ஸித்தாந்தத்தை நன்கு விளக்கிக் காட்டுகிருர்.

ஸம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் சிறந்த அறிவும், கற்பனைத் திறனும், சொல்சக்தியும் நிரம்பிய ஸ்ரீ V. S. மணிஅய்யர் இம் மாதிரியான நாடகங்கள் எழுதுவது அத்யாத்மஜிஜ்ஞாஸுக்களுக்கு மிகவும் உபகாரமானது.

அம்மாள் அக்ரஹாரம்
30-1-1984.

**K. S. வெங்கடராமசாஸ்திரி**

# அணிந்துரை

ஸ்ரீமத் சங்கரபகவத் பாதாளுடைய சிஷ்யர்களில் ஒருவராகிய ஸ்ரீ ஹஸ்தாமலகருடைய 12 ச்லோகங்களே ''ஹஸ்தாமலகீயம்'' என்பதாகும். வேதாந்த ஸாரமான அச்லோகங்களின் விளக்கத்தையும், அவை வெளியான சூழ்நிலை, ஸ்ரீ ஹஸ்தாமலகர் வரலாறு ஆகியவற்றையும் நாடக வடிவில் ஸ்ரீமான் டாக்டர் V.S. மணி அய்யர் அவர்கள் ஆக்கித் தந்திருக்கிறார்கள்.

புதுக்கோட்டை அதிஷ்டானத்திலிருந்து வெளிவரும் ''ஸ்ரீ புவனேச்வரி விஜயம்'' என்ற திங்கள் இதழில் வெளியான இந்நாடகம் இப்பொழுது நூல் வடிவில் ஒரே தொகுப்பாக மலர்வது மகிழ்ச்சிக்குரியது.

''ஹஸ்தாமல கீயம்'' தோன்றியது ஒரு சுவையான வரலாறு. பெண்ணொருத்தி நதியில் ஸ்னானம் செய்வதற்காகத் தன் சிறு குழந்தையுடன் சென்றாள். நதிக்கரையில் ஸமாதி நிலையிலிருந்த ஆத்ம ஞானி ஒருவரிடம் குழந்தையை கிடத்தி 'இக்குழந்தையைப் பார்த்துக்கொள்ளுங்கள்' எனத் தெரிவித்துவிட்டு நீராடச் சென்று விட்டாள். குழந்தையோ தவழ்ந்து சென்று நதியில் வீழ்ந்து இறந்து விட்டது. ஸமாதி நிலையில் இருந்த ஞானி இதனையறியவில்லை. ஸ்னானம் செய்துவிட்டுத் திரும்பிய பெண், தன் குழந்தையைக் காணாமல் பல இடங்களிலும் தேடிக் கடைசியில் நதியில் மூழ்கி இறந்து கிடப்பதைக் கண்டாள். இறந்த குழந்தையை ஞானியின் முன் போட்டுக் கதறியழுது புலம்பினாள். ஸமாதி கலைந்து கண் விழித்த ஞானி நடந்தவற்றை யறிந்து கருணைகொண்டு அக்குழந்தை சரீரத்தில் தம் யோக பலத்தால் பரகாயப்ரவேசம் செய்தார். குழந்தையும் உயிர்பெற்று எழுந்தவுடன் அனைவரும் மகிழ்ந்து தமது ஊருக்குத் திரும்பினார்கள். குழந்தை நாளொருமேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்ந்தது. ஆனால் மற்ற குழந்தைகளைப் போலல்லாமல் ஜடமாக இருந்தது. பெற்றோர்கள் குழந்தையைப் பற்றி மிக்கக் கவலைப்பட்டனர்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் க்ஷேத்ராடனம் செய்துகொண்டு ஸ்ரீபலி என்ற கிராமத்திற்கு வந்தபோது பிரபாகரர் என்ற அந்த ஜடச் சிறுவனின் தந்தையார் ஆசார்யாளிடம் தன் பிள்ளை ஜடன் போல் இருப்பதைத் தெரிவித்து ஜாட்யத்தைப் போக்குமாறு வேண்டினார். ஆசார்யாளின் திருவடிகளில் விழுந்து வணங்கிய

அச்சிறுவனே எழுந்திருக்கவேயில்லை. பிரபாகரர் தம் சிறுவன் எவருடனும் பேசாமல் உலகப் பற்றற்றவன் போல் நிந்தையையும் ஸ்துதியையும் மறுக்கவோ ஏற்கவோ இன்றி வாழ்வதையும் தெரிவித்தார்.

ஸ்ரீ ஆசாரியாள் 13 வயதே நிறைந்திருந்த அச்சிறுவனைத் தூக்கி யமர்த்தி ''சிறுவனே! நீ ஏன் ஜடன் போல் இருக்கிறாய்?'' எனக்கேட்டார். இதுவரை வாய் திறவாதிருந்த அச்சிறுவன் ''நான் ஜடனல்லன்; அழிவற்ற ஞானஸ்வரூபமான ஆத்மாவே நான்'' என்ற கருத்துக்களடங்கிய 12 ச்லோகங்களால் பிரும்மஸ்வரூபத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கினார். ஆசார்யாள் மகிழ்ந்து சிறுவனின் மஹிமையை யுணர்ந்து ஸன்யாசம் கொடுத்து தமது சிஷ்யராக ஏற்றுக்கொண்டார். அன்று முதல் அச்சிறுவன் உலகப் புகழ்பெற்ற 'ஹஸ்தாமலகர்' ஆனார். பிரும்மஸ்வரூபத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கியதால் அவர் ஹஸ்தாமலகர் எனத் திருநாமம் பெற்றார்; அவரது 12 ச்லோகங்களும் 'ஹஸ்தாமலகீயம், ஆயிற்று.

உலகில் பொதுவாக குரு அல்லது பெரியவர்களுடைய கிரந்தங்களுக்கே சிஷ்யர்கள் அல்லது பிற்காலத்தவர் பாஷ்யமியற்றுவார்கள். ஆனால் சிஷ்யரான ஹஸ்தாமலகரின் கிருந்தத்திற்கு குருவான ஸ்ரீ ஆசார்யாள் பாஷ்யமியற்றியதே அதன் சிறப்புக்குச் சிறந்த சான்றாகும்.

ஒரு கருத்தை அனைவரும் எளிதில் அறிந்து கொள்ள நாடகங்களைக் காட்டிலும் வேறு சிறந்த சாதனமில்லையெனலாம். ஸ்ரீமான் டாக்டர் V. S. மணி அய்யர் அவர்கள் அரியதான வேதாந்த விஷயங்களை மிகச்சிறந்த முறையில் அனைவரும் எளிதில் உணரும் வண்ணம் தமிழில் அழகான நாடகமாக்கித் தந்துள்ளார்கள். நாடக நூலை கையில் எடுத்தவுடன் ஒரே மூச்சில் முழுவதும் படித்து முடிக்கும் வண்ணம் காட்சிகளை மிக விறுவிறுப்பாகக் காட்டியுள்ளார்கள். பாத்திரப்படைப்பு, உரையாடல்கள், சம்பவங்களின் தொடர்பு ஆகிய அனைத்துமே மிகவும் சிறப்பாக அமைந்துள்ளன. நாடகம் அமைப்பதில் ஆசிரியர்க்குள்ள நீண்ட அனுபவம் இந்நாடகத்தில் பிரதிபலிப்பதில் விந்தையில்லை.

இவ்வாசிரியர் முன்னரே 'உபநிஷத் நாடகமாலா' என்ற பெயரில் உபநிஷதங்களை நாடகமாக்கித் தந்துள்ளார்கள்.

ஆர்வமுடையார்க்கே சுவை யூட்டும் வேதாந்த விஷயங்களை அனைவரும் எளிதில் உணரும் வண்ணம் எழுதும் ஆற்றலுக்கு அவரது ஆழ்ந்த வேதாந்த ஞானமே காரணமாகும். பூர்வபக்ஷம், சித்தாந்தம் இவைகளை விளக்க ஆசிரியர் கையாண்டுள்ள முறை சிறப்பானது; பாராட்டத்தக்கது.

ஆஸ்திகோத்தமரான ஸ்ரீமான் டாக்டர் V. S. மணி அய்யர் அவர்கள் குருபக்தி மிக்கவர். பக்தித் திறத்தால் பாரோர் மகிழ அவர் செய்துள்ள இத்தொண்டு ஈடு இணையற்றது. அன்பர் உலகம் இந்நூலை வரவேற்று நற்பயன் பெறும் என்பதில் ஐயமில்லை.

ஸ்ரீமான் டாக்டர் V. S. மணி அய்யர் அவர்கள் இதுபோல் தொடர்ந்து நற்பணிகள் செய்ய குருவருளை வேண்டி ஸ்ரீமாதா புவனேச்வரியைப் பிரார்த்திக்கிறேன்.

இந்நூலுக்கு அணிந்துரை எழுத எனக்குச் சந்தர்ப்பமளித்த ஸ்ரீமான் டாக்டர் V. S. மணி அய்யர் அவர்களின் பேரன்புக்கு என் நன்றி கலந்த நமஸ்காரத்தைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

புதுக்கோட்டை
23—8—1983

**வித்வான். ப. சிகாகிரீசன்**
அதிஷ்டான ஆஸ்தான வித்வான்.

# நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீசங்கரபகவத்பாதர் | - அத்வைத ஸித்தாந்த ஸ்தாபகர் |
| 2. | யோகி நித்யானந்தர் | - பிரம்மநிஷ்டர், வாயு பகவானின் அவதாரம் |
| 3. | ஹரதத்தர் | - பிரபாகரரின் குமாரர், பின்னல் ஹஸ்தாமலகா சார்யார்என்று பிரஸித்தி யடைந்தவர் |
| 4. | பிரபாகரர் | - வேதசாஸ்திர வித்வான் தர்மிஷ்டர் |
| 5. | பத்மாவதி | - பிரபாகரரின் மனைவி |
| 6. | விஷ்ணுமித்ரர், சாண்டில்யர் | - பிரபாகரரின் நண்பர்கள் |
| 7. | ஸனந்தனர், ஸுரேசுவரர் | - ஸ்ரீசங்கர பகவத்பாதரின் சிஷ்யர்கள் |

ஆசிரமவாஸிகளும், கிராம ஜனங்களும்
சிறுவர்களும், தோழிகளும்,

**காலம்:** சுமார் 1200 வருஷங்களுக்கு முன்னர்

**இடம்:** முதல் காட்சி பிரயாகையில் யமுநாநதி தீரத்திலும், கடைசி 2 காட்சிகள் சிருங்க கிரியிலும், மற்ற காட்சிகள் ஸ்ரீபலி அக்ர ஹாரத்திலும்

# ஹஸ்தாமலகீயம்

(நாடகம்)

## முதலாவது அங்கம்

### காட்சி 1

(திரைக்குப் பின்னால்)

ஓம் நமோ ப்ரஹ்மாதிப்யோ ப்ரஹ்ம வித்யா ஸம்ப்ரதாய கர்த்ருப்யோ வம்ச ரிஷிப்யோ நமோ குருப்ய :

  

யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்
யோ வை வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்மை
தம் ஹ தேவமாத்மபுத்தி ப்ரகாசம்
முமுக்ஷுர் வை சரணமஹம் ப்ரபத்யே

ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி :

(இந்த சுலோகங்கள் பாடப்படுகின்றன)

(திரை தூக்கப்பட)

(பிரயாகையில் யமுனு நதிக்கரை தென்படுகிறது. யோகி நித்யாநந்தர் பிரவேசிக்கிருர்.)

**யோகி நித்தியாநந்தர் :** எல்லாம் பிரம்ம மயம். ஸ்ரீ பரமேச்வரனுடைய ஆக்ஞைப்படி வாயுதேவனுகிய நான் கலியுகத்தில் அவதரித்திருக்கின்றேன். ஸ்ரீ பரமேச்வரன், சங்கர பகவத்பாதராக அவதரிக்கும்போது நான் அவருக்கு சிஷ்யராகவேண்டும் என்பது பகவத் ஸங்கல்பம். ஜகத்குருவும் தக்ஷிண தேசத்தில் அவதாரம் செய்துவிட்டார் என்று கேள்விப்படுகிறேன். எங்கே என்று தெரியவில்லை. கூடிய சீக்கிரம் அவரைத் தரிசனம் செய்ய வேண்டும். (யோசித்துக்கொண்டு நடக்கிருர்.) இங்கே இப்போது கும்பமேளா நடக்கிறது. பாரத தேசத்தின் அனைத்து பாகங்களிலிருந்தும் பெரியோர்களும், ஆஸ்திகப் பெருமக்களும், ரிஷிகளும், தவச்ரேஷ்டர்களும், முனிபுங்கவர்களும் வருவார்களே! அந்தக் கூட்டத்தில் அவரும் வரலாமல்லவா? இந்த ஒரு வாரமாகத் தேடியும் காண முடியவில்லை. தெய்வ க்ருபையால் அவரைக் காணக் கிடைக்க வேண்டும். கண்டு வந்தனம் செய்து சிஷ்யனுக ஏற்றுக் கொள்ளும்படி பிரார்த்திக்க வேண்டும். நல்ல மங்களகரமான வேளை. கீழ்திசையில் அருணேதயம் ஆகிறது. ஸ்நானம் செய்யும் ஜனங்களின் கூட்டம் அதிகமாக வரவில்லை, இப்போது ஆகாயம், நதி, மலை சுற்றுப்புறம் எல்லாம் த்யான ஸமாதியிலேயே மூழ்கி இருப்பது போல காட்சியளிக்கிறது. என்ன ரமணீயமான காட்சி!

''அஸத்தினின்று என்னை ஸத்துக்கு அழைத்துச் செல். இருளினின்று என்னை ஒளிக்கு அழைத்துச் செல். சாவினின்று என்னை சாகாமைக்கு அழைத்துச் செல்.''

நானும் இந்த வடவிருக்ஷத்தினடியில் அமர்ந்து த்யானம் செய்கிறேன். (அமர்ந்து கண்மூடி தியானிக்கிருர். குளிக்க வருவோர் வரத் தொடங்குகிருர்கள், பண்டாக்களும் வந்து கடை விரிக்கின்றனர்.)

(அந்த நேரத்தில் பத்மாவதி இரண்டு வயதான தன் சிறு ஆண் குழந்தையுடனும், தன் தோழிகளுடனும் பிரவேசிக்கிருள். குழந்தை அழுதுகொண்டிருக்கிறது.)

**1-வது தோழி :** அம்மா! இப்படி குழந்தை அழும்போது எப்படி ஸ்நானம் பண்ணுவது?

**2-வது தோழி :** நம்மில் ஒருவர் குழந்தையைப் பார்த்துக் கொள்வோம். மற்றவர்கள் ஸ்நானம் பண்ணிவிடலாம். பிறகு குழந்தையை வாங்கிக்கொண்டால் அவரும் குளித்துவிடலாம்.

**பத்மாவதி :** நீ சொல்வது சரிதான். அப்படியே செய்வோம். நான் குழந்தையை வைத்துக்கொண்டிருக்கிறேன். நீங்கள் எல்லோரும் ஸ்நானம் செய்துவிட்டு வாருங்கள். அதற்குள் குழந்தையின் தந்தையும் வருகிருரா என்று பார்ப்போம்.

**1-வது தோழி :** நம்முடன் வந்தவர் எங்கே போனுர் ?

**பத்மாவதி :** வழியில் ஸ்ரீ குமரிலபட்டரை சந்தித்துப் பேசிக் கொண்டிருக்கிருர். நீங்கள் முன்னல் போங்கள். நான் பின்னல் வருகிறேன் என்று சொல்லிவிட்டார்.

**2-வது தோழி :** நீ குழந்தையைப் பார்த்துக்கொண்டிரு. நாங்கள் எல்லோரும் குளித்துவிட்டு வருகிறேம். (மற்ற பெண்கள் குளிப்பதற்காக நதியில் இறங்குகின்ருர்கள். ஸ்நானம் செய்ய வருகிறவர்களின் கூட்டம் மேலும் அதிகமாகிறது. பண்டாக்களின் கூச்சல் ஆரவாரம், பேச்சுக்குரல் இனந்தெரியாத ஒலிகள் எல்லாங் கூடி உச்சஸ்தாயியை பெற்றிருக்கின்றன. இதற்கெல்லாம் மேலாக குழந்தையும் கத்துகிறது. எவ்வளவோ சமாதானம் செய்தும் விளையாட்டுக் காண்பித்தும் அழுகை ஓயவில்லை. குழந்தையைத் தூக்கிக்கொண்டு சுற்றி நடந்துகொண்டு பத்மாவதி யோகி நித்யானந்தர் தியான சமாதியிலிருக்கும் பக்கத்திற்கு வருகிருள். அவரை தரிசித்த மாத்திரத்தில் குழந்தையின் அழுகை நின்றுவிடுகிறது.)

**பத்மாவதி :** (தனக்குள்) இது என்ன ஆச்சரியம்! ரொம்ப நாழியாக கத்திக்கொண்டிருந்த குழந்தை இப்பொழுது அழுகையை நிறுத்திவிட்டதே. இந்த மகானின் தரிசன விசேஷம்தான். இதில் சந்தேகமே இல்லை. இவரிடம் குழந்தையை விட்டுவிட்டு நான் நதியில் இறங்கி ஸ்நானம் செய்தால் என்ன? முதலில் விழுப்பு ஸ்நானத்தை முடித்துக்கொண்டால் என் புருஷர் வரும் சமயம் சங்கல்பம் செய்து ஸ்நானம் செய்ய சௌகர்யமாய் இருக்கும். வீண் காலதாமதம் தவிர்க்கலாம். சரி அப்படியே செய்வோம்.

(தன் புதல்வனை யோகி நித்யானந்தருக்கு எதிரில் கீழே துணியை விரித்து கிடத்துகிருள்).

**பத்மாவதி :** முனிபுங்கவரே! சிறிது நேரம் இந்த குழந்தையைப் பார்த்துக்கொள்ளுங்கள். அநேக நமஸ்காரம். நான் ஸ்னனம் செய்துவிட்டு ஒரு நொடியில் வந்துவிடுகிறேன்.

(குழந்தை அழாமல் சிரித்துக்கொண்டிருக்கிறது. தாய் நிம்மதியாக ஸ்நானத்திற்கு போகிருள். குழந்தை தானுகவே தவிழ்ந்து கொள்கிறது. மெல்ல மெல்ல தவிழ்ந்து நதியின் பக்கம் போகிறது. தெய்வச் செயலாக, பகவத் சங்கல்பப்படி குழந்தை நதியில் விழுந்து இறந்து விடுகிறது. சிலர் பார்த்து எடுக்கின்றனர். யார் குழந்தை? யார் குழந்தை ? யார் குழந்தை என்ற சப்தம், பலர் வந்து பார்த்து விட்டு தன்னுடையது இல்லை என்று சொல்லிவிட்டுப் போய்விடுகிருர்கள். பத்மாவதி வந்து பார்க்கிருள், புலம்புகிருள். குழந்தையை வாங்கிக்கொண்டு யோகி நித்யானந்தருக்கு முன் ஓடுகிருள். அவர் முன்னுல் கிடத்தி வாயிலும், வயிற்றிலும் அடித்துக்கொண்டு புலம்புகிருள். அவளுடைய கணவர் பிரபாகரரும் வந்து சேருகிருர். எல்லோருமாக சேர்ந்து யோகி நித்யானந்தரின் முன்னிலையில் உரத்த குரலில் அழுகின்றனர்.)

**பத்மாவதி :** பிராமணரே ! உம்மிடம் ஒப்புவித்த குழந்தை அநியாயமாக இறந்துவிட்டதே ! ஐயோ ! கண் திறந்து பாரும். எங்களைக் காப்பாற்றும், உயிர் பிச்சை கொடும்.

**பிரபாகரர் :** எதற்காக வீணுக அழுது கலவரப்படுத்துகிருய் ? எல்லாம் விதிப்படி நடக்கும். ஊருக்குப் போவோம் வா. எய்தவனிருக்க அம்பை நோவதில் பயனுண்டோ ?

**1-வது தோழி :** எவ்வளவு சந்தோஷமாக வந்தோம். இப்போது தாங்கமுடியாத துக்கம் வந்துவிட்டதே. ஈசனே !

**2-வது தோழி :** இந்த யமுனு நதிக்கரையில்தானே காளியனின் விஷத்தினுல் மரணமடைந்த கோக்களையும், கோபாலர்களையும் கண்ணன் காப்பாற்றினுன். அதுபோல இந்த யோகியும் இந்த குழந்தையைக் காப்பாற்றித்தரக் கூடாதா?

**பிரபாகரர்:** அம்மா! அந்தக் காலம் துவாபரயுகம். இதுகலிகாலம். கண்ணன் பகவானுடைய அவதாரம். அந்த சக்தி எல்லோருக்கும் வருமா?

**பத்மாவதி :** சக்தியைவிட நம்பிக்கைதான் பிரதானம். தெற்கேயுள்ள கர்நாடக தேசத்திலிருந்து எவ்வளவோ தூரம் சிரமப்பட்டு வழிப்பயணம் செய்து வந்திருக்கிறோம். குழந்தையை பலி கொடுக்கவா வந்தோம்? குழந்தை இல்லாமல் நான் திரும்புவதாக இல்லை. இந்த தவச்ரேஷ்டர்தான் எனக்கு விமோசனம் காட்ட வேண்டும். இல்லையேல் இந்த யமுனுதேவி என்னையும் அணைத்துக்

கொள்ளட்டும். (நதியை நோக்கி ஓடுகிருள் மற்றவர்கள் எல்லோரும் சேர்ந்து தடுத்து, ''அம்மா சொல்வதுதான் சரி. நாம் எல்லோரும் இந்த தவச்ரேஷ்டருக்கு முன் அமர்ந்து பிராயோபவேசம் இருப்போம்'' என்று கூறுகிருர்கள்.)

(அப்படியே கூட்டம் அவர் முன்ஞல் உட்காருகிறது. இவர்கள் புலம்பலேயும் கூக்குரலேயும் அழுகையையும்கேட்ட யோகி நித்யானந்தர் தியான ஸமாதியிலிருந்து வெளிப்பட்டு விபரங்களே ஞான திருஷ்டியினுல் தெரிந்து கொள்கிருர்.)

**யோகி நித்யானந்தர்:** (தனக்குள்) இப்போது என்ன செய்வது? குழந்தை இறந்துவிட்டது. நான் அதற்கு காரணம் இல்லே. எல்லோரும் நான்தான் பொறுப்பு என்று சொல்லுகிருர்கள். பழியோரிடம், பாவமோரிடம். அவர்கள் துயரம் தாங்கொணுத் துயரம் அப்படிச் சொல்லச் செய்கிறது. துன்பத்தை துடைக்க முடியுமா? அதை எப்படித் தீர்ப்பது? நம்மால் ஏதாவது செய்ய முடியுமா? இறந்துபோன குழந்தைக்கு உயிர் எப்படிக் கொடுக்கமுடியும்? இவர்கள் பேச்சிலிருந்து கர்நாடக தேசத்திலிருந்து வந்ததாக தெரிகிறது. (யோசிக்கிருர்) அதுதான் சரி. நம் குருநாதரும் தென் தேசத்தில்தான் அவதாரம் செய்திருக்கிருர். கர்நாடக தேசத்தின் பக்கத்தில்தான் எங்கேயாவது இருக்கும். இவர்களுடன்கூட நாமும் கர்நாடக தேசத்திற்கு போனுல் என்ன? ஒரு கல்லில் இரண்டு மாங்காய். அப்படியே செய்கிறேன். இந்த சரீரத்தை தியாகம் பண்ணிவிட்டு யோக சக்தியினுல் கூடுவிட்டுக் கூடுபாய்ந்து இந்தக் குழந்தையின் உடலில் புகுந்து கொள்கிறேன். இந்த குழந்தையும் உயிர் பெற்று எழும். இவர்கள் எல்லோரும் சந்தோஷம் அடைவார்கள். என்னேயும் கர்நாடக தேசத்துக்கு எடுத்துப் போவார்கள். எனது எண்ணமும் நிறைவேறும். குருநாதரை தர்சிக்கலாம்.

(குண்டலினி சக்தியை எழுப்பி சுழுமுனேக்குள் சென்று பிரம்மரந்திரத்தின் மேலாக முகத்திலிருந்து பனிரெண்டு விரலளவுத் தள்ளி பிராணனே நிறுத்தி பரகாயப் பிரவேசம் செய்கிருர். குழந்தையின் உடலில் புகுந்துகொள்கிருர். அதிசயம் நிகழ்கிறது. இறந்த குழந்தை உயிர்பெற்று எழுகிறது. பத்மாவதி குழந்தையை எடுத்துக்கொண்டு ஆனந்தம் அடைகிருள், எல்லோரும் எழுந்து யோகி நித்யானந்தரை பிரதட்சிணம் செய்து நமஸ்காரம் செய்து 'மகான்' என்று புகழ்ந்து விட்டுப் போகிருர்கள் இரண்டு பண்டாக்கள் வந்து யோகி நித்யானந்தரின் சடலத்தை தூக்கி யமுனேயில் போடுகிருர்கள்.)

(திரை விழுகிறது)

## அங்கம் 1 காட்சி 2

(திரை தூக்கப்பட)

(கர்நாடக தேசத்தில் ஸ்ரீபலி அக்ரஹாரத்தில் பிரபாகரருடைய வீடு. கூடத்தில் பிரபாகரரும் அவருடைய நண்பர் விஷ்ணுமித்திரரும் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கிருர்கள், பிரபாகரரின் மனைவி பத்மாவதியும் சமயல் காரியங்களை கவனித்தவாறே அவர்களுடைய பேச்சிலும் கலந்து கொள்கிருள், அக்னி ஹோத்ரத்தில் ஹோமம் செய்யப்படும் பாலின் பரிமள வாசனை எங்கும் வீசுகிறது.)

**பிரபாகரர்:** நண்பரே! என்ன செய்யவேண்டும் என்றே எனக்குத் தெரியவில்லை கவலை தீர்வதற்கு என்ன மார்க்கம்? இந்த ஊரில் ஸாந்நித்யம் கொண்டிருக்கும் பார்வதி நாயகராகிய பரமசிவன்தான் அருள் செய்யவேண்டும்.

**விஷ்ணுமித்திரர்:** இந்தக்கவலை பல வருஷங்களாக இருப்பது தானே! இன்று திடீரென்று வருத்தப்படுவானேன்?

**பத்மாவதி:** ஆரிய புத்திரரே! நமக்கு என்ன குறைவு! ஏராள மான பசுக்கள், நிறைய சம்பத்து, செழிப்புள்ள நிலம், உற்ற உறவினர்கள், தயவுள்ள தாயாதிகள், அன்பிற் சிறந்த நண்பர்கள் இவைபோல் மற்றும் எல்லாச் செல்வங்களும் இருக்கின்றன. ஒரு சின்ன விஷயத்திற்காக தாங்கள் இப்படி வருத்தம் அடையக்கூடாது.

**பிரபாகரர்:** பிரியே! இதுவா சின்ன விஷயம்! இந்த அக்ரஹா ரத்தில் இரண்டாயிரம் அந்தணர்கள் வசிக்கின்றனர். எல்லோரும் யக்ஞங்கள் செய்தவர்கள் வேதங்களை நன்கு அத்யயனம் செய்தவர் கள். வேதங்களில் கூறும் ஸத்கர்மங்களை, பக்தி சிரத்தையுடன் செய்பவர்கள் அனுஷ்டாதாக்கள். இவர்கள் மத்தியில் இப்படி—

**விஷ்ணுமித்திரர்:** ஆம்! தாங்கள் சொல்வது எல்லாம் உண்மையே. இவர்களுக்கெல்லாம் நடுநாயகமாக ஹாரத்திற்கு மத்திய மணிபோலவும், இரவுக்கு அலங்காரமான சந்திரன் போலவும் தாங்கள் விளங்குகின்றீர்கள்.

**பிரபாகரர்:** இப்படி இருப்பதிஞல்தான் இந்த சூழ்நிலையில் என்னுடைய துயரம் பதின்மடங்கு அதிகமாகிறது.

**விஷ்ணுமித்திரர்:** ப்ராதஸ்ஸவனம், மாத்யந்தினஸவனம் திருதீயஸவனம் ஆகியவைகளால் உலகெல்லாம் கீர்த்தியை தாங்கள் பரவச்செய்திருக்கிறீர்கள் மிகுந்த புத்திமானுகவும் விளங்குகின்றீர்கள். இவ்வருத்தத்தை அவ்வளவாக பாராட்டல் ஆகாது தங்களுக்கு அழகல்ல இது.

**பத்மாவதி:** நானும் எவ்வளவோ சொல்லியாகிவிட்டது. அவர் என்னைத் தேற்றவேண்டி இருக்க நான் அவரை தேற்ற வேண்டியதாய் இருக்கிறது. விதியின் கொடுமை.

**பிரபாகரர்.** என்னவெல்லாம் இருந்து என்ன பயன்? பரம் பரையாக எங்கள் குடும்பத்தில் எல்லோருமே வித்வான்கள். சாஸ்திரங்களில் வல்லமை உள்ளவர்கள் பூர்வ மீமாம்ஸாதர்சனத்தில் கிரந்தங்கள் எழுதி புகழ்பெற்றவர்கள் ஆனுல் என் மனதில் சந்தோஷமே இல்லேயே! ஏன்? என்னுடைய ஏகபுத்திரன் புத்தியற்றவனுக இருக்கிருன். வயது பதிமூன்று ஆகிறது. இதுவரைக்கும் வாய் திறந்து ஒரு வார்த்தைகூட பேசியது கிடையாது. மற்றவர் பேசுவதை கவனிக்கிறதும் இல்லே. ஒருதடவைகூட வாய் திறந்து ''அம்மா! அப்பா'' என்று அருமையாகப் பேசியதில்லே.

**பத்மாவதி:** இந்த கிராமத்தில் எல்லோரும் கர்மவீரர்களாக இருக்கிருர்கள். ஆனுல் இவன் மட்டும் செய்கையற்றவனுக இருக்கிருன். எப்போதும் ஏதோ தியானம் செய்பவன்போல் இருக்கிருன். ஊமையாக — வாய்பேசா மௌனியாக — ஜடமாக இருக்கிருன். எல்லாம் விதியின் பயன்.

**பிரபாகரர்:** நண்பரே! என் மகன் உருவத்தில் மன்மதன். ஒளியில் சூரியன். முகத்தின் அழகில் பூர்ணசந்திரன். பொறுமையில் பூமாதேவிக்கும் மேலானவன் மந்திரம், தந்திரம். ஔஷதம் ஒன்றும் பிரயோஜனப்படவில்லே.

**விஷ்ணுமித்திரர்:** நண்பரே! எல்லாம் விதிப்படி நடக்கிறது. தங்கள் குமாரனுக்கு இது எதனுல் ஏற்பட்டிருக்கிறது என்று அறிய முடியவில்லேயே? காரணம் தெரிந்தால் அல்லவா பரிஹாரம் செய்யலாம்?

**பிரபாகரர்:** முன் ஜென்ம வினையினுலா? கிரஹ தோஷத்தினுலா? பூதம், பிசாசு முதலியவைகளின் ஆவேசத்தினுலா? அல்லது

விரோதிகளின் ஏவல், சூன்யம் முதலியவற்றினுலா ? எந்தக் காரணத்தினுல் இவன் ஜடம்போல் இருக்கிருன் ? தெரியவில்லையே. அன்பரே, பாராத ஜோசியர் இல்லை; கேளாத மந்திரவாதி இல்லை; வினவாத வைத்தியர் இல்லை.

**பத்மாவதி :** நம் செல்வன் ஹரதத்தன் சரியாக உண்பதும் இல்லை, உறங்குவதுமில்லை, நல்ல ஆடைகள் அணிவதுமில்லை. ஆனுல் எப்படியோ நன்ருக வளர்ந்திருக்கிருன். எல்லாம் கனவாக தோன்றுகிறது எனக்கு ஒன்றுமே புரியவில்லையே. (புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக்கொள்கிருள்)

**பிரபாகரர்:** பிரியே! அழவேண்டாம். நண்பரே அதிகாலை வருகைக்குக் காரணம் உண்டோ ?

**விஷ்ணுமித்திரர் ;** நான் தங்களிடம் ஒரு முக்கியமான செய்தியைச் சொல்ல வந்தேன். இங்கே உள்ள நிலைமை அதைக் கூற எனக்குத் தருணம் கிடைக்கவில்லை.

**பிரபாகரர் :** அப்படியா! அது என்னவென்று சொல்லுங்கள். தாங்கள் அதை முதலிலேயே சொல்லியிருக்கலாமே.

**விஷ்ணுமித்திரர் :** ஸ்ரீ சங்கர பகவத்பாதர் என்ற பெயருள்ள பெரிய யதீசுவரர் தனது சிஷ்யர்களுடனும் ப்ரசிஷ்யர்களுடனும், புண்ணிய தீர்த்த யாத்திரையாய் கோகர்ணம், ஹரிஹர க்ஷேத்திரம் முதலிய இடங்களுக்கு விஜயம் செய்துவிட்டு மூகாம்பிகைக்கு வந்திருக்கிருர். அங்கே சில தினங்கள் தங்குகிருர். அவரை நம்முடைய கிராமத்திற்கும் விஜயம் செய்யும்படி அழைக்க வேண்டும். அது விஷயமாகத் தங்களிடம் கலந்து ஆலோசித்து முன் ஏற்பாடுகள் செய்வதற்குத்தான் தங்களிடம் கூறவந்தேன்.

**பத்மாவதி :** இந்த விஷயம் நேற்றே எனக்குத் தெரியுமே. நதிக்கரையில் சொன்னுர்கள். அதை நான் இவரிடம் உடனே சொல்லியாகிவிட்டது.

**பிரபாகரர் :** நானும் நண்பர் சாண்டில்யரை மூகாம்பிகைக்கு அனுப்பி விபரம் தெரிந்துவர சொல்லியிருக்கிறேன்.

**விஷ்ணுமித்திரர் :** அப்படியா ! ரொம்ப சந்தோஷம். தங்களைப் போன்ற நண்பர்கள் இருக்கும்பொழுது ஒன்றுமே செய்வதற்கு பிரமாதம் இல்லை. கவலையும் தேவை இல்லை.

**பிரபாகரர் :** சாண்டில்யர் வரும் சமயம்தான், அவர் வந்தவுடன் எல்லோருமாக யோசித்து ஆவன செய்வோம்,

(சாண்டில்யர் வருகிறார். பரஸ்பரம் நமஸ்காரம் செய்து கொண்டபின் அவரும் பக்கத்தில் உட்காருகிறார்.)

**சாண்டில்யர் :** நாளைக்கு மறுநாள் அதிகாலையில் ஸ்ரீ சங்கர பகவத்பாதர் நம் கிராமத்திற்கு விஜயம் செய்கிறார்கள். நேரிலேயே ஒப்புக்கொண்டு அனுக்ரஹித்தார்கள் தவிர நான் அங்கு இருக்கும் பொழுது ஒரு அதிசயமும் நடந்தது.

**பத்மாவதி :** அது என்ன அதிசயம் !

**சாண்டில்யர் :** ஒரே புதல்வனை இழந்த ஒரு தம்பதிகள் அந்த சடலத்தை அவர்முன் கிடத்தி அழுது புலம்பினர். அதைக் கண்ட ஸ்ரீசங்கரர் மிகவும் இரக்கப்பட்டு வருந்தி அவர்களை சமாதானப் படுத்தினார். அப்பொழுது ஒரு அசரீரி வாக்கு உண்டாயிற்று.

**விஷ்ணுமித்திரர் :** அசரீரியா ! இக்கலிகாலத்திலுமா ! அது என்ன கூறியது ?

**சாண்டில்யர் :** ''காப்பாற்ற வல்லமை அற்றவனுடைய கருணை வருத்தத்தை வளர்க்குமே தவிர, நீக்காது, நீ வீணாக ஏன் வருத்தப் படுகிறாய் ?'' என்று கூறிற்று.

**பிரபாகரர் :** அப்பொழுது ஸ்ரீசங்கரர் என்ன செய்தார்? என்ன சொன்னார்?

**பத்மாவதி:** அவர் சிறுவனாய் இருக்கும்பொழுதே ''கனகதாரா'' ஸ்தோத்ரம் சொல்லி பொன் நெல்லிக்காய் மழையை வரவழைத் தவர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதுபோல ஒரு அற்புதம் நிகழ்த்தியிருப்பார் இப்போதும்.

**பிரபாகரர் :** ஸ்ரீசங்கரர் என்ன செய்தார்? விபரமாகச் சொல்லும்

**சாண்டில்யர் :** ஸ்ரீசங்கரர் அசரீரியை முன்னிட்டு கூறினார், ''மூவுலகங்களையும் காப்பாற்ற வல்லமையுள்ள தங்களுக்கே அது தகும். ஆகையால் தாங்களே கருணைகூர்ந்து இவர்களுடைய துன்பத்தை அகற்றவேண்டும்.'' அவர் இவ்வாறு கூறுகையிலேயே இறந்த புதல்வன் துயில் நீங்கியவன்போல் எழுந்தான். இதுதான் அங்கே என் கண்முன் நடந்த ஆச்சரியமான சம்பவம். இந்தச் செயலைக்கண்டு எல்லோரும் வியந்தனர்.

**பத்மாவதி :** அம்மகானுபாவர் வந்தவுடன் நம் குழந்தை ஹரதத்தனையும், அவர் திருவடிகளில் கிடத்தி ஆசீர்வாதம் செய்யச் சொல்லவேண்டும்.

**பிரபாகரர் :** பிரியே! அந்தப்படியே செய்வோம். நமக்கு அநுகூலம் கிடைக்கும் என்பதில் சந்தேகமே இல்லை. பழைய நிகழ்ச்சி எனக்கு ஞாபகம் வருகிறது.

**பத்மாவதி :** ஆமாம் பிராணநாதரே! என் மனதிலும் அந்த நினைவு தோன்றுகின்றது.

**விஷ்ணுமித்திரர். சாண்டில்யர் இருவரும் :** பழைய நிகழ்ச்சி என்ன? உங்கள் மனத்திரையில் காணும் விபரம் என்ன? நாங்கள் அறியலாமா?

**பிரபாகரர் :** புதிதாக ஒன்றும் இல்லை. தங்களுக்கும் தெரிந்த விஷயமே. சென்ற கும்பமேளா சமயத்தில் பிரயாகையில் யமுனை நதிக்கரையில் ஹரதத்தன் உயிர் பிரிந்த சமயத்தில் நடந்தவைதான்.

**பத்மாவதி :** அப்போது ஒரு முனிபுங்கவர் முன்னால் உடலைப் போட்டு உயிர் பிச்சைக் கேட்டோம். ஜீவனுடன் எழுந்தது குழந்தை. அதுபோல் இப்போதும் ஸ்ரீசங்கர பகவத்பாதர் முன்னால் வணங்கச்செய்து பேசும் வரம் கேட்கவேண்டும். பகவத் க்ருபையால் நம் குழந்தை பேசுவான் என்று நினைக்கிறேன்.

**சாண்டில்யர் :** அம்மணீ! தங்களுக்குச் சந்தேகமே வேண்டாம். மூகாம்பிகையில் நடந்த அதிசயத்தை பார்க்கும்போது இது எவ்வளவு சிறிய விஷயம்! கட்டாயமாக உங்கள் குமாரன் ஸ்வாமிகளின் முன்னிலையில் நன்ருகப் பேசுவான்.

**விஷ்ணுமித்திரர் :** நண்பரே! இதில் ஐயப்பாட்டிற்கே இடமில்லை. தங்கள் புத்திரன் அன்று தங்கள் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மகாவித்வானுக்குரிய சிறப்புடன் கவியாகவே பொழிவான் என்று நம்புகிறேன்.

**பிரபாகரர் :** நண்பர்களே! அப்படித்தான் நினைக்கிறேன். நம்பினோர் கெடுவதில்லை. இது நான்மறையின் தீர்ப்பு ஸ்வாமிகள் வருகைக்கு சிறப்பான முறையில் ஸ்வாகதம் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வோம், ''ந பூதோ ந பவிஷ்யதி'' என்று இருக்க வேண்டும் வாருங்கள். (மூவரும் எழுகின்றனர். திரை விழுகின்றது).

# அங்கம் 1 காட்சி 3

(திரை தூக்கப்பட)

[ஸ்ரீபலி அக்ரஹாரத்தில் சிவன் கோவிலும், சன்னதி தெருவும் தென்படுகிறது. கோவிலுக்கு முன்னுல் 5, 6 சிறுவர்கள் கோலி முதலிய விளையாட்டுக்கள் விளையாடிக்கொண்டு இருக்கின்றனர். ஒரு புறமிருந்து ஹரதத்தன் பிரவேசம். அழகான உருவம்; திடகாத்ரமான தேகம்; குடுமி கட்டாமல் விரித்த நிலையில் கிடக்கிறது அழுக்கு அடைந்த ஆடை. முகத்தில் நல்ல தேஜஸ் எங்கேயோ, எதையோ நோக்குபவன்போல கண் பார்வை.]

ஹரதத்தன் - (தனக்குள்)

சத்தியமே சத்தியமே ஜகமே இல்லை
சங்கற்ப விகற்பங்கள் சிறிதுமில்லை
நித்தியவானந்த மயப்பிரம்ம மொன்றே
நிச்சலமயெப்போதும் நிலைத்த வுண்மை

ஸர்வம் ப்ரம்மமயம். (மெதுவாக நடக்கிருன்). நான் எங்கே இருந்தேன்? இப்போது எங்கு இருக்கிறேன்? பிரயாகை எங்கே இருக்கிறது? ஸ்ரீபலிக்கும் அதுக்கும் எவ்வளவு தூரம்? இவ்விடம் வந்து கிட்டத்தட்ட ஒரு வியாழ வட்டம் ஆகிறது. வந்த காரியம் ஒன்றும் நடக்கவில்லையே, குருநாதரை இன்னும் தரிசிக்கவில்லை. காலடியில் அவர் அவதரித்ததாயும், சிருங்ககிரியில் மடம் ஸ்தாபித்ததாயும் கேள்விப்படுகிறேன். எப்போது, எப்படி அங்கே போவது? என்று தரிசிப்பது? ஒன்றும் தெரியவில்லையே. ஒன்றும் ஸங்கல்பம் செய்ய வேண்டாம், நடக்கிறபடி நடக்கட்டும், நான் ஒன்றும் செய்ய வேண்டாம், சும்மா இரு சொல்லற.

[சிறுவர்கள் ஹரதத்தனை பார்த்தவுடன் விளையாட்டை நிறுத்தி விட்டு, அவன் விஷயமாகப் பேசி, கேலிசெய்து துன்புறுத்த தொடங்குகிருர்கள்.]

சிறுவன் 1: இதோ பார்! யார் வருகிருர் என்று, பணக்கார வீட்டுப்பிள்ளை வருகிருன் பட்டாடை கட்டிக்கொண்டு.

சிறுவன் 2: அழுக்கு வேஷ்டியைக் குறிப்பிடுகிருயா? அவனையும் சேர்த்துக்கொண்டு விளையாடுவோமா?

சிறுவன் 3: அவன் என்றைக்குத்தான் நம்முடன் விளையாட வந்தான்? இப்போது வரப்போகிறுன்!

சிறுவன் 1: இதுவரை வராவிட்டாலும் இன்று எப்படியாவது சேர்த்துக்கொள்ளவேண்டியதுதான்.

சிறுவன் 2: கட்டாயப்படுத்தியாவது, வேண்டிவந்தால் அடித்தாவது.

சிறுவன் 3: அடியாத மாடு பணியாது,

சிறுவன் 4: இந்தப் பழமொழி எல்லாம் அங்கே பலிக்காது. அடித்தாலும் வைதாலும் அவன் நம்முடன் சேரமாட்டான். அவன் ஒரு அதிசயப்பிறவி.

[சிறுவர்கள் ஹரதத்தனை நெருங்கி, விளையாட்டிற்கு வரவேண்டும் என்று கையைப் பிடித்து இழுக்கிருர்கள். அவன் வராமல் இருக்கவே ஒருவன் கோபத்துடன் அடிக்கிருன். மற்ெருருவன் வைகிருன். சிலர் கல்லையும், மண்ணையும் வாரி இறைக்கின்றனர்.]

ஹரதத்தன்: (தனக்குள் சிந்தனை) இவ்வளவு வருஷங்களும் இங்கே நான் ஜடமாகவே இருந்துவிட்டேன். எங்கே இவர்களோடு சேர்ந்தால் சம்சாரம் பற்றிக்கொள்ளுமோ என்று, தாமரை இலை தண்ணீர் போலவும், தண்ணீரில் விழுந்த எண்ணெய் போலவும், புளியம்பழத்தின் தோடுபோலவும் ஒட்டாமலேயே இருந்துவிட்டேன் இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது? பிரம்மத்தின் சொரூப லக்ஷணமே அதுதானே. இப்போதும் அப்படியே இருக்கவேண்டியது தான்,

(சிறுவர்கள் எவ்வளவோ முயற்சித்தும் ஹரதத்தன் மௌனமாக இருந்துவிடுகிருன். சிறுவர்கள் கற்பாறையில் மோதின மண்ணுங் கட்டியாக சிதறிப்போய் தோல்வி அடைந்து ஏமாற்றத்துடன் திரும்புகிருர்கள்.)

சிறுவன் 1: மேல் நாம் என்ன விளையாட்டு விளையாடலாம்? அவன் வராவிட்டால் போகட்டும்.

சிறுவன் 2: அது வெறும் பைத்தியம், மக்கு, முகத்தைப் பார், உடலைப் பார். பேயோ, பிசாசோ பிடித்தவன் மாதிரி இருக்கிருனே!

சிறுவன் 4: அவனு பைத்தியம்? இல்லவே இல்லை. அவன் பெரிய மகான். ஒரு சிறந்த ஞானி என்று நான் நினைக்கிறேன்,

சிறுவன் 3: மகானுவது, மண்ணுங்கட்டியாவது, செல்வந்தர் வீட்டுப்பிள்ளை. நெய், பால், தயிர் முதலிய சத்துணவுகள் நிரம்ப கிடைக்கிறது. உடல் நன்ருக கொழுகொழு என்று வளர்ந்திருக் கிறது. ஆனுல் உள்ளம் வளரவில்லை; மூளைக்கு வளர்ச்சி இல்லை. அதுதான் இப்படி இருக்கிருன்.

சிறுவன் 1: ஒருசமயம் நீ சொன்னது சரியாக இருக்கலாம். அதனுல்தான் உன்மத்தனைப் போலவும், சிறு பாலகன்போலவும், காட்சியளிக்கிருன்.

சிறுவன் 2: சரி அவன் எப்படியோ போகட்டும். நாம் சடுகுடு விளையாடுவோமா?

சிறுவன் 3: கண்ணைக்கட்டி தட்டாமாலை சுற்றி விளையாடு வோமே! நடுவில் சாக்ஷியாக வேண்டுமானுல் ஹரதத்தனை வைக்க லாம்.

சிறுவன் 4: பிரியமில்லாதவனை ஏன் வம்புக்கு இழுக்கிறீர்கள்? இந்த உலக விவகாரத்தையே அவன் சாக்ஷியாகத்தானே பார்த்துக் கொண்டிருக்கிருன். அப்படியிருக்க உன்னுடைய விளையாட்டிற்கு ஒன்றும் அவன் சாட்சியாக வரமாட்டான்.

[சிறுவர்கள் தம்போக்கில் விளையாடுகின்றனர். ஹரதத்தன் ஒருபுற மாய் போய்விடுகிருன். மறுபுறமிருந்து சாண்டில்யரும், ஊர்மக்க ளும், வேலைக்காரர்களும் வருகிருர்கள்.]

சாண்டில்யர்: நண்பர்களே! இங்கே பாருங்கள். (கையைச் சுட்டிக்காட்டிக்கொண்டு) இந்த இடத்தில்தான் ஸ்வாமி சன்னதிக்கு எதிராக பெரிய கொட்டகை போடவேண்டும். நன்ருக அலங்காரங் கள் செய்ய வேண்டும். கொடிகள், தோரணங்கள் மேல்கட்டி முதலியவை கட்டவேண்டும்.

ஊர்ஜனம் 1: இந்த இடத்தில் பூர்ண கும்பம் கொடுத்து ஸ்வாகதம் செய்யலாம், வேத பாராயணத்துக்கும் ஏற்பாடு செய்வோம்.

ஊர்ஜனம் 2: ஸ்வாகத ஸ்லோகங்கள், கீர்வாணத்திலும், கன்னடத்திலும் இருக்கவேண்டும்.

ஊர்ஜனம் 1: தவிர நாதசுர இசை, பஞ்சவாத்தியங்கள் முதலியன ஏற்பாடு செய்யவேண்டும். வரவேற்புக்கு யானைகளும் கொண்டு வரவேண்டும்.

சாண்டில்யர்: அப்படியே செய்வோம். (வேலைக்காரர்களுக்கு ஆணையிடுகிறார்) இன்று இரவோடிரவாகவே ஸ்ரீராமர் பட்டாபிஷேகத்துக்கு அயோத்தியை அலங்கரித்ததுபோல் நீங்கள் செய்து முடிக்கவேண்டும். (சிறுவர்களைப் பார்த்து) நீங்கள் இனிமேல் இங்கே விளையாட முடியாது, ஏரிக்கரைக்குப் போங்கள்.

சிறுவர்கள்: மாமா! எதற்குப் பெரிய பந்தல் போடுகிறீர்கள்? அலங்காரம் எதற்கு? கோவில் உற்சவம் சென்ற மாதம்தானே முடிவடைந்தது.

சாண்டில்யர்: குழந்தைகளே! உங்களுக்குத் தெரியாதா? ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்யார் மூகாம்பிகையிலிருந்து நாளை நம் ஊருக்கு விஜயம் செய்கிறார்கள். அவர்களை நல்லமுறையில் வரவேற்கத்தான் இந்த ஏற்பாடுகள் எல்லாம்.

சிறுவர்கள்: அப்படியா ரொம்ப சந்தோஷம் நாங்களும்கூட கலந்துகொள்ளலாமா?

சாண்டில்யர்: கட்டாயமாக, பருப்பு இல்லாமல் கல்யாணமா? நீங்கள் எல்லோரும் அவசியம் வரவேண்டும். அதிகாலையில் ஸ்நானம்செய்து, புதிய ஆடை உடுத்தி, கோபி, சந்தனம் அல்லது விபூதி அவரவர் குடும்ப வழக்கம்போல் அணிந்துகொண்டு வரவேண்டும். ''ஜய ஜய சங்கர, ஹர ஹர சங்கர'' என்று நீங்கள் வந்து கோஷம் போடவேண்டும். (சிறுவர்கள் அப்போதே கோஷம் போட்டுக்கொண்டு போகிறார்கள். சாண்டில்யரும், ஊர் ஜனங்களும் போகின்றார்கள். வேலைக்காரர்கள் வேலை செய்துகொண்டிருக்கின்றனர். இந்த சம்பாஷணையைக் கேட்ட ஹரதத்தன் திரும்ப வருகிறான்).

ஹரதத்தன்: (தனக்குள்) நான் என்ன கேள்விப்பட்டேன் கனவா? இது நனவா? உண்மைதானு? தேடிப்போன மூலிகை காலடியில் கிடைப்பதுபோல் அல்லவா இருக்கிறது. ஸத்குருநாதர் நாளை இங்கு வருகிருராமே! அவரைத் தேடி நான் போகவேண்டியதாய் இருக்க, அவரே வலியவந்து என்னை ஆட்கொள்ள வருகிருர். அவ்யாஜ கருணமூர்த்தி அவர். நான் தன்யனுனேன். (யோசிக்கிருன்) ஸத்குரு நாதரை தரிசிக்கும்போது நான் என்னசெய்ய வேண்டும்? அவரை எவ்விதம் வணங்க வேண்டும்? என்ன பேச வேண்டும்? (மெதுவாக ஆலோசித்துக்கொண்டு நடக்கிருன்) ஸத்குருவின் திருவடிகளே எனக்குத் துணை. அவையே எனக்கு சரணும், அரணும். அவர் வெகு தூரத்தில் வரும்போதே, தாயை நோக்கி ஓடும் கன்றுபோல நான் ஓடிச்செல்வேன். அவர் திருப்பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்வேன். அவருடைய தாமரைக் கண்களால் குளிர என்னை அவர் கடாக்ஷிப்பார். அப்பொழுது சாக்ஷுஷதீக்ஷை எனக்கு கிடைக்கும். திருவடியில் கிடக்கும் அடியேனை அன்போடு வாரி எடுத்து அணைத்துக் கொள்வார். அப்பொழுது எனக்கு ஸ்பர்சதீக்ஷை கிடைக்கும். கமலம் போன்ற கரத்தை தூக்கி என் தலையில் வைத்து ஆசீர்வதிப்பார். வலது செவியில் உபதேச மந்திரம் மொழிவார். அப்பொழுது எனக்கு மந்திர தீக்ஷை கிடைக்கும். நான் புளகாங்கிதம் அடைவேன். மீண்டும், திருவடிகளில் பணிந்து எழுவேன். என்னை சிஷ்யனுக கருணையோடு ஏற்றுக்கொள்வார் என்னையும்கூட அழைத்துக்கொண்டு போவார். என் பாக்யமே பாக்யம். (மறுபடியும் யோசிக்கிருன்) என்ன இப்படி மனுேராஜ்யம். கடிவாளம் இல்லாத குதிரைபோல் வாயு வேகத்தில், போகிறது. இவையெல்லாம் நடைபெறுமா? நடக்கக் கூடியவைகளா? என்னை அவர் ஏற்றுக்கொள்வாரா? அதற்கு எனக்கு என்ன தகுதி இருக்கிறது? யோக்யதை வேண்டாமா? இவ்வளவு வருஷங்களாக வளர்த்துவரும் என் பெற்ருேர்கள் என்னை அனுப்ப வேண்டுமே! இத்தனை வருஷங்களாக என்னை காப்பாற்றிய இந்த ஊருக்கும் இந்த ஊர்க்காரர் எல்லோருக்கும் மனமார்ந்த வணக்கம்.

''உற்ருரை யான் வேண்டேன் ஊர் வேண்டேன் பேர் வேண்டேன்,

கற்ருரை யான் வேண்டேன் கற்பனவும் இனி அமையும்''

என்னைப் போகவிடுங்கள். (மண்ணில் கீழே விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் பண்ணுகிருன். கோவிலில் உச்சிக்கால பூஜை மணி அடிக்கிறது.)

ஹரதத்தன்: (எழுந்து சிந்தனை) நல்ல சகுனம், மணியோசை கேட்கிறது. எனது வலக்கண்ணும், வலது தோளும் துடிக்கின்றன. அதுவும் நல்ல நிமித்தம்தான். எனது எண்ணம் ஈடேறும். பல வருஷங்களாக எதற்காக இங்கே காத்துக் கிடக்கின்றேனே அது நிறைவேறும், சந்தேகமில்லை. எல்லாம் ஸத்குரு நாதரின் அனுக்ரஹம். ஊர் ஜனங்கள் பேசிக்கொண்டார்களே. ஸ்ரீராமர் பட்டாபிஷேகத்திற்கு அயோத்தியாபுரியை ஒரே நாளில் இரவோடு இரவாக அலங்கரித்ததுபோல் என்ற அந்த வாசகங்களும் எனக்கு ஒரு சுப சூசகம்தான். ராமர் பட்டாபிஷேகமா பண்ணிக்கொண்டார்! வனவாசத்திற்கு அல்லவா போனர், அதுபோல்தான் இங்கும். நானும் குருநாதருடன் போய்விடுவேன் (மெதுவாக நடந்து கொண்டு) அவருக்கு நான்குவிதமான பணிவிடைகள் செய்து கொண்டு அவருடன் இருப்பேன். நாளைக் காலை வருகிறார். அப்பப்பா! இன்றைய பகல்பொழுதும், இரவு முப்பது நாழிகையும் நீங்க வேண்டும். கழிவது ஒரு யுகம்போல தோன்றுகிறது. இன்று மாலையே அவர் வரலாகாதா! ஏன் இப்போதே வரலாமே. ஆம்! அவர் வராவிட்டால் என்ன? நான் மூகாம்பிகை போய் பார்த்து விடுகிறேன் இப்போதே ஓடுகிறேன். என்னல் அவரைக் காணமல் இனிமேல் கணமேனும் இருக்கமுடியாது. வழி தெரியாதே! யாரிடம் விசாரிப்பது? மௌன விரதத்தைக் கைவிடவும் இயலாது திசை நோக்கிப் போகவேண்டியதே. திருவருள் கூட்டிவைக்கும்; குருவருள் கைகூடும்.

(பத்மாவதி வருகிருள்)

பத்மாவதி: குழந்தாய் ஹரதத்தா! அன்பே! சாப்பிட வா. வைசுவதேவம் செய்துவிட்டு உன் தந்தை உனக்காகக் காத்திருக்கிருர். உடனே வா. (என்று கூறி கையைப் பிடித்து வலுக்கட்டாயமாக அழைத்துக் கொண்டு போகிருள். விருப்பமின்றி – ஆனல் வேறு வழியின்றி – ஹரதத்தனும் கூடப்போகிருன். வேலையாட்கள் தொடர்ந்து வேலை செய்கிருர்கள்.)

(திரை விழுகிறது)

# அங்கம் 1 காட்சி 4

(திரைக்குப் பின்னால்)

அஞ்ஞானுந்தர் கஹனபதிதான் ஆத்மவித்யோபதேசை:
த்ராதும் லோகான் பவதவசிகாதாப பாயச்யமானுன்
முக்த்வா மௌனம் வடவிடபினே மூலதோ நிஷ்பதந்தீ
சம்போர்மூர்த்திச்சரதி புவனே சங்கராசார்ய ரூபா.

இந்த ச்லோகம் பாடப்படுகிறது. பின்னணி இசை ஒலிக்கின்றது.

(திரை தூக்கப்பட)

ஸ்ரீபலி அக்ரஹாரத்தில் தெரு வீதிகளும், விழாப்பந்தலும் தென்படுகின்றன. பேரிகை, மிருதங்கம், பணவம், துந்துபி, படகம், எக்காளம் முதலிய வாத்ய ஓசைகளுடன் நாதஸ்வர இசையுடன் ஊர் மக்கள் ஊர்வலமாக வருகின்றார்கள். யானைகள் வருகின்றன. பின்னால் வேத பாராயணம் செய்து கொண்டு பிராமணர்கள் வருகின்றார்கள் பூர்ணகும்பங்களுடன் பலவகை பழம், கற்கண்டு, புஷ்பம் முதலிய பொருள்களுடன் பிரபாகரர், விஷ்ணு மித்திரர், சாண்டில்யர் முதலியோர் வருகின்றார்கள். சிறுவர்கள், ''ஜய ஜய சங்கர, ஹர ஹர சங்கர'' என்று கோஷம் போட்டுக் கொண்டு வருகிறார்கள் அக்ரஹாரம் பூராவும் வாழை மரங்கள், மாவிலை தோரணங்கள் மற்றும் கொடிகள், பூமாலைகள் முதலியவைகளால் நன்றாக அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கிருஹத்தின் வாசலிலும் தீபம் ஏற்றி வைக்கப்பட்டு ஸ்திரீ ஜனங்கள் கற்பூர ஆரத்தியுடன் நிற்கின்றனர். கோவில்களில் மணிகள் முழங்குகின்றன, சங்குகள் ஒலிக்கின்றன. ப்ரசிஷ்யர்கள் கட்டியம் கூற

கட்டியம்: ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய வர்ய, பதவாக்ய ப்ரமாண பாராவார பாரீண, யமநியமாஸன ப்ராணாயாம ப்ரத்யாஹார தாரணா த்யான ஸமாத்யஷ்டாங்க யோகானுஷ்டான நிஷ்ட, தபஸ் சக்ரவர்த்தீ, ஷட்தர்சன ஸ்தாபனாசார்ய, வ்யாக்யான ஸிம்மாஸநாதீச்வர ஸகல நிகமாகமஸாரஹ்ருத்ய ஸாங்க்யத்ரயப்ரதிபாதக வைதிக மார்க்க ப்ரவர்த்தக ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்ரீஜகத் குரு ஸ்ரீகௌடபாதாசார்ய பாத பத்மாராதக ஸ்ரீகோவிந்த பகவத் பாதாசார்ய குருகர கமல ஸஞ்ஜாத ஸ்ரீசங்கர பகவத்பாத ஸ்வாமிகள் இதோ எழுந்தருளி வருகிறார். வெகு பராக் எச்சரிக்கை. ஸாம்பராக்.

ஸ்ரீசங்கரபகவத்பாதர் தன்னுடைய சிஷ்யர்களுடன் பிரவேசிக்கிறார். இரு புறங்களிலும் ஸுரேசுவரர், சனந்தனர் முதலிய சிஷ்யர்கள் தண்ட, கமண்டலங்களுடன் வருகிறார்கள். நல்ல வாலிப வயது. முகத்தில் பிரம்ம தேஜஸ் ஜ்வலிக்கிறது. மந்தஹாஸம், காஷாய வஸ்த்ரம் அணிந்திருக்கிறார். வலது கையிலுள்ள உருத்திராக்ஷ மாலையிலுள்ள மணிகளை உருட்டிக்கொண்டிருக்கிறார். கம்பீரமாக மத்த கஜம்போல நடந்து வருகிறார். ஊர்வலம் விழாப் பந்தலை வந்து அடைகிறது. அப்போது பிரபாகரர் முதலியவர்கள் பூர்ண கும்பத்துடன் வந்து யதீஸ்வரரை வரவேற்கிறார்கள். ஸ்வாகத ஸ்லோகங்கள் படிக்கிறார்கள். பழங்களை சமர்ப்பணம்செய்து அவருடைய பாதகமலங்களை வணங்குகிறார்கள். பத்மாவதியும், ஹரதத்தனும் மற்றும் பலரும் வணங்குகிறார்கள். ஹரதத்தன் வணங்கி விழுந்தவன் பிறகு எழுந்திருக்கவில்லை. மற்றவர்கள் எல்லோரும் எழுந்து கைகட்டி, வாய் புதைத்து நிற்கின்றார்கள். பரமாச்சார்யார் எல்லோரையும் நாராயண ஸ்மரண பூர்வமாக ஆசீர்வதித்துவிட்டு ஹரதத்தனை கையைப்பிடித்து எழுப்புகிறார். அப்போது

பிரபாகரர்: பிரபுவே, இவன் என்னுடைய ஏகபுத்திரன் வயது 13 ஆகியும் அறிவு உண்டாக வில்லை. எழுத்துக்கள் எழுத அறியாதவனாக இருக்கிறான். எப்படியோ உபநயனம் செய்வித்தேன். ஆனால் இன்னும் இவன் வேதங்களை ஓதவில்லை சரியாக உண்பதும் இல்லை. பையன்களுடன் விளையாடச் செல்வதுகூட இல்லை. மௌனியாக இருக்கிறான்.

பத்மாவதி: தன் விருப்பம்போல் நடக்கிறான். கூறிய காரியத்தை செய்வது இல்லை. துஷ்டப் பையன்கள் முட்டாள் என்று கூறி அடித்தாலும் கோபப்படுவது இல்லை.

பிரபாகரர்: இவனுடைய ஜடத் தன்மைக்குக் காரணம் என்ன? தாங்கள் எவ்வளவோ அற்புதங்கள் நிகழ்த்தியிருப்பதாக கேள்விப்படுகிறோம். க்ருபைசெய்து இவனுடைய ஜடத் தன்மையைப் போக்கி அருள் பாலிக்கவேண்டும்.

ஸ்ரீசங்கர பகவத் பாதர்: ப்ராமணோத்தமரே! நான் அவனிடம் நேரில் பேசிப்பார்க்கிறேன். (ஹரதத்தனை அணைத்து மடியில் உட்கார வைத்துக்கொண்டு) ''குழந்தாய்! நீ யார்? நீ ஏன் ஜடம்போல் இருக்கிறாய்? உண்மையைச் சொல். அப்பனே!

ஹரதத்தன்: (எழுந்து அவர் பாத கமலங்களில் நமஸ்காரம் செய்துவிட்டு, வணக்கமாக நின்றுகொண்டு) ''ஸத்குருவே நான் ஜடமல்ல. இந்த உடல் ஜடமான சரீரம்—சேதனனுன என்னுடைய சம்பந்தத்தினுல்தான் செயல் உள்ளதாக விளங்குகிறது.

ஸ்ரீசங்கரபகவத் பாதர்: அப்படியா! ரொம்ப சந்தோஷம். மேலும் விபரமாகச் சொல்,

ஹரதத்தன்: ஸ்வாமி! சோகம், மோகம், பசி, தாகம், ஜனனம், மரணம் என்ற ஆறு ஊர்மிகளும் எனக்கில்லை. உண்டாகுதல் இருத்தல், வளருதல், மாறுதல், தேய்தல், நாசமடைதல் என்ற விகாரங்களும் எனக்கு இல்லை. கேவலம் பரமானந்த ரூபம் நான். ப்ரபஞ்சப் பற்றற்ற சித் ரூபியான ஆத்மா நான்.

ஸ்ரீசங்கர பகவத் பாதர்: மட்டற்ற மகிழ்ச்சி. உன்னுடைய அனுபவத்தை விபரமாக சொல்வாயாக.

ஹரதத்தன்: அப்படியே ஆகட்டும் ஸ்வாமி! (தன் அனுபவத்தை 12 ஸ்லோகங்களால் சொல்லுகிருன்).

நிமித்தம் மநஸ் சக்ஷுராதிப்ரவ்ருத்தெள
நிரஸ்தாகிலோபாதி ராகாச கல்ப: ।
ரவிர் லோக சேஷ்டா நிமித்தம் யதா ய:
ஸ நித்யோபலப்திஸ்வரூபோऽஹமாத்மா ॥ 1

யமக்ந்யுஷ்ணவத் நித்யபோத ஸ்வரூபம்
மனஸ்சக்ஷுராதீன்யபோதாத்மகானி ।
ப்ரவர்தந்த ஆச்ரித்ய நிஷ்கம்பமேகம்
ஸ நித்யோபலப்திஸ்வரூபோऽஹமாத்மா ॥ 2

முகாபாஸகோ தர்பணே த்ருச்யமானோ
முகத்வாத் ப்ருதக்த்வேந நைவாஸ்தி வஸ்து ।
சிதாபாஸகோ தீஷு ஜீவோऽபி தத்வத்
ஸ நித்யோபலப்திஸ்வரூபோऽஹமாத்மா ॥ 3

யதா தர்பணுபாவ ஆபாஸஹானெள
முகம் வித்யதே கல்பநாஹீனமேகம் ।
ததா தீவியோகே நிராபாஸகோ ய:
ஸ நித்யோபலப்தி ஸ்வரூபோऽஹமாத்மா ॥ 4

மநஸ் சக்ஷுராதேர் வியுக்த: ஸ்வயம் யோ
மநஸ் சக்ஷுராதேர் மநஸ் சக்ஷுராதி : ।
மநஸ் சக்ஷுராதே ரகம்ய ஸ்வரூப :
ஸ நித்யோபலப்திஸ்வரூபோ஽ஹமாத்மா ॥ 5

ய ஏகோ விபாதி ஸ்வத: சுத்தசேதா:
ப்ரகாசஸ்வரூபோ஽பி நாநேவதீ ஷு ।
சராவோதகஸ்தோ யதா பாநுரேக:
ஸ நித்யோபலப்திஸ்வரூபோ஽ஹமாத்மா ॥ 6

யதாநேகசக்ஷு : ப்ரகாசோ ரவிர் ந
க்ரமேண ப்ரகாசீகரோதி ப்ரகாச்யம் ।
அநேகா தியோ யஸ்ததைக ப்ரபோத :
ஸ நித்யோபலப்திஸ்வரூபோ஽ஹமாத்மா ॥ 7

விவஸ்வத் ப்ரபாதம் யதா ரூபமக்ஷம்
ப்ரக்ருஹ்ணுதி நாபாத மேவம் விவஸ்வான் ।
யதாபாத ஆபாஸயத்யக்ஷமேக :
ஸ நித்யோபலப்திஸ்வரூபோ஽ஹமாத்மா ॥ 8

யதா ஸூர்ய ஏகோப்ஸ்வநேகஸ் சலாஸு
ஸ்திராஸ்வப்யநந்வக் விபாவ்ய ஸ்வரூப: ।
சலாஸு ப்ரபிந்நாஸு தீஷ்வேவ மேக:
ஸ நித்யோபலப்தி ஸ்வரூபோ஽ஹமாத்மா ॥ 9

கநச்சந்ந த்ருஷ்டிர் கநச்சந்நமர்கம்
யதா நிஷ்ப்ரபம் மந்யதே சாதிமூட: ।
ததா பத்தவத் பாதி யோ மூடத்ருஷ்டே:
ஸ நித்யோபலப்தி ஸ்வரூபோ஽ஹமாத்மா ॥ 10

ஸமஸ்தேஷு வஸ்துஷ்வநுஸ்யூதமேகம்
ஸமஸ்தானி வஸ்தூனி யம் ந ஸ்ப்ருசந்தி ।
வியத்வத் ஸதா சுத்த மச்சஸ்வரூபம்
ஸ நித்யோபலப்தி ஸ்வரூபோ஽ஹமாத்மா ॥ 11

உபாதௌ யதா பேததா ஸன்மணீநாம்
ததா பேததா புத்தி பேதேஷு தே஽பி ।
யதா சந்த்ரகாணும் ஜலே சஞ்சலத்வம்
ததா சஞ்சலத்வம் தவாபீஹ விஷ்ணே ॥ 12

பிரபாகரர் : என்ன அதிசயம்! எழுத்து வாசனை அறியாதவன் கவியாகப் பொழிகிருனே.

பத்மாவதி : என்ன அற்புதம்! இன்றுதான் எனது குறை நீங்கிற்று எனது மகன் வாய்திறந்து பேசியதைக் கேட்டேன்.

ஸுரேசுவரர் : என்ன ஆச்சரியம்! ஆத்மானுபவத்தில் மூழ்கி யிருப்பவரின் சொந்த அனுபவமே ஸ்லோகங்களாக வெளிப்பட்டன. இத்தகைய சிறப்பும், தெளிவும்கொண்ட சுலோகங்களை நான் கேட்டதேயில்லை

ஸனந்தனர் : ஆம் நண்பரே! ஆத்ம தத்துவத்தை வெகு அழகாக, தெளிவாக எளிமையாக விளக்குகிறது இந்த சுலோகங்கள். நன்று, நன்று.

விஷ்ணுமித்திரர் : நண்பரே! பரமஹம்சரின் அநுக்ரஹத்தினுல் உங்களுடைய புத்திரன் திருவாய் மலர்ந்து அருளிய ச்லோகங்களை கேட்டீர்களா? சிறந்த ஞானிகளாலும் அறிதற்கு அரிதான ஆத்ம தத்துவத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளக்கிவிட்டான் அல்லவா!

ஸ்ரீசங்கர பகவத்பாதர் : ஆம்! ஆம்! உள்ளங்கை நெல்லிக்கனி போல விளங்கும்படியாக ச்லோகங்களை இயற்றியதால் இவனுக்கு 'ஹஸ்தாமலகர்' என்ற பெயர் பிரசித்தமாக விளங்கப் போகிறது இன்றிலிருந்து.

பிரபாகரர் : பரமபூஜ்யரே! இன்றுவரைக்கும் ஜடப் பொருளாகக் காட்சியளித்தான் இவன். தங்களுடைய ஸன்னிதான விசேஷத்தினுல் தான் சிறந்த ஞானியாக உபதேசிக்கிருன் இப்போது.

(சிறுவர்கள் எல்லோரும் வந்து வணங்கி மன்னிப்புக் கோரு கிருர்கள். ஹரதத்தன் புன்னகை புரிகின்ருன்.)

சிறுவன் 4 : நான் அன்றே சொன்னேனல்லவா! அது உண்மைதானே! இப்போது எல்லோரும் தெரிந்துகொண்டீர்களா?

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் : இவன் தங்களுடன் தங்குவதற்குத் தகுதியற்றவன். பிறவியிலிருந்தே சம்சார பாசத்திலிருந்து விடுபட் டவன். கிருஹம் முதலியவைகளின்மேல் இவனுக்குப் பற்றில்லை.

தனது உடலிலேயே நான் என்ற அபிமானம் இல்லாதவனுக்கு வெளிப் பொருள்களில் என்னுடையது என்ற அபிமானம் எப்படி உண்டாகும்?

ஸனந்தனர் : மலர்ந்த தாமரைக் குளத்தில் சந்தோஷமாக விளையாடும் அன்னப்பறவை, காட்டிலுள்ள குட்டைகளில் புரண்டு களிப்படையுமா? ஸத்குருவே! தங்களிடமே சிஷ்யனாக இருக்கத் தக்கவன் இவன்.

ஸுரேசுவரர் : நமது ஸத்குருவுக்கு ஒரு சிறந்த ஞானி சிஷ்யராகக் கிடைத்திருக்கிறார். ஸ்ரீபலி அக்ரஹார விஜயம் பலனுடையதாயிற்று.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் : நீங்கள் சொல்வது சரிதான். இவன் கிருஹஸ்தாச்ரமத்துக்கு தகுதி அற்றவன். (பிரபாகரரை நோக்கி) இவனால் தங்களுக்கு யாதொரு பயனும் இல்லை முன் ஜென்ம பயிற்சியினால் எல்லாவற்றையும் நன்கு உணர்ந்த சிறந்த ஆத்ம ஞானியாக விளங்குகிறான். ஆகையால் நான் இவனை என்னுடன்கூட சிஷ்யனாக அழைத்துக்கொண்டு போகிறேன்.

பிரபாகரர் : பிரபுவே! புத்திரபாசம் தடுக்கிறது. தாங்கள் என்னுடைய ஒரே புதல்வனை கூட்டிக்கொண்டு போய்விட்டால் அந்தத் துயரை என்னால் தாங்க முடியாது ஸ்வாமி!

பத்மாவதி : ஸ்வாமி! தாங்கள் ஹரதத்தனுக்கு வேண்டியது போல் உபதேசம் செய்து எங்களுடன் இருக்கச் செய்ய வேண்டும். இதுவே எனது பிரார்த்தனை.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் : அம்மா! எவ்வளவு புதல்வர்களை, லாலனை செய்யவில்லை? எவ்வளவு பேருடன் இன்பமனுபவிக்கவில்லை. அந்த புத்திரர்களும், அவர்களும் எங்கே? நாம் எங்கே? ஸம்ஸாரத்தில் சந்திப்பு வழிப் போக்கர்களுடைய சந்திப்பன்றோ. தவிரவும் இவன் பிறவியிலேயே ஒரு ஞானி பிரயாகையில் நடந்த சம்பவங்களை ஞாபகப்படுத்திப் பாருங்கள். அன்று தங்கள் குழந்தை இறந்து போனவுடன் ஏற்பட்ட தங்களுடய துயரைப் போக்குவதற்காக அந்த மாமுனிவர் மிகுந்த கருணையுடன் தன்னுடைய யோக சக்தியினால் அந்தக் குழந்தையின் உடலில் புகுந்தார். இதுவரையிலும் தங்களுடன் இருந்திருக்கிறார். மேலும் அவரை குடும்பத்திலிருத்துவது சரியல்ல. அவருக்கு ஒரு நாளும் வெளி நோக்கே உண்டாகாது.

பத்மாவதி : ஸ்வாமீ! தங்கள் இஷ்டம்போல் ஹரதத்தனை அழைத்துப்போவதில் ஆட்சேபனை ஒன்றுமில்லை. ஆனால் எங்கள் குலம் விளங்க-வம்சதந்து அறுந்துபோகாமல் இருக்க அநுக்ரஹம் செய்யவேண்டும்.

ஸ்ரீசங்கர பகவத்பாதர் : (ஒரு மாப்பழத்தை எடுத்து அநுக்ரஹம் செய்து அவள் கையில் கொடுக்கிறார்.) பிரபாகரரே! ''புத்திர காமேஷ்டி'' என்ற வேள்வியினால் புருஷோத்தமனை ஆராதிப்பீராக தங்களுக்கு அனுரூபனான நல்ல புதல்வன் தோன்றுவான் (ஹரதத்தனை அருகில் அணைத்துக்கொண்டு அவனது செவியில், 'அபயம் ஸர்வ பூதேப்யோ மத்த: ஸ்வாஹா' என்ற மந்திரத்தை உபதேசம் செய்கிறார் ஹரதத்தனும் அந்த மந்திரத்தை திரும்பச் சொல்கிறான் ஸத்குரு கொடுத்த காஷாய வஸ்திரத்தை உடுத்திக்கொள்கிறான் ஆகாயத்திலிருந்து மலர் மாரி பொழிகிறது கோயில்மணி அடிக்கிறது சங்குகள் முழங்குகின்றன யானை கர்ஜிக்கிறது சிறுவர்கள் ஹஸ்தாமலகருக்கு ஜேய் என்று கோஷமிடுகின்றனர்.

(திரை விழுகிறது)

---

## அங்கம் 1 காட்சி 5

(திரை தூக்கப்பட)

(ஸ்ரீபலி அக்ரஹாரத்தில் பிரபாகரருடைய வீடு தென்படுகிறது. பிரபாகரர், விஷ்ணுமித்திரர், சாண்டில்யர் மற்றும் ஊர் ஜனங்கள் எல்லோரும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள்.)

பிரபாகரர்: நண்பர்களே! இந்த இரண்டு தினங்களும் நம் கிராமம் பூலோக கைலாசமாகவே விளங்கியது. யதீச்வரர் வந்ததிலிருந்து சுபாவமாகவே பகைமை உள்ள மிருகங்கள்கூட விரோதத்தை விலக்கி சந்தோஷத்துடன் இருந்தன. தவிர ஒன்றுக்கொன்று உபசாரமும் செய்துகொண்டன.

விஷ்ணுமித்திரர்: அல்லாமலும், மரங்களும், கொடிகளும் அகாலத்தில் பழங்களையும், மலர்களையும் பொழிந்தன. நதிகளில் சுத்தமான தண்ணீர் பெருகியது. மேகமும் மலைகளில் நன்றாக வர்ஷித்தது. அதனால் தண்ணீர் அருவியாய் பிரவஹித்தது.

சாண்டில்யர்: அதுவும் தவிர, திசைகள் யாவும் மகிழ்ச்சி அடைந்தன. பரிமள வாசனையுடன் காற்று ஆனந்தமாக வீசியது அக்னிஹோத்ர சாலையில் உள்ள அக்னிகள் மூன்றும் வலமாகச் சுற்றி சுடரொளிவிட்டு ஜொலித்தன, எங்கும், எப்போதும், எல்லோரும் மகிழ்ச்சியுடன் இருந்தனர்.

ஊர்ஜனம் 1: பெரியோர்களே! ஞானமார்க்கமாகிய சமுத்திரத்திற்கு சரத்கால சந்திரன்போல ஸ்வாமிகள் விளங்கினார்.

ஊர்ஜனம் 2: அவரை நெருங்கிப் பார்த்தவர்கள் சம்புவின் அடையாளங்களை அவரது திருவுடலில் கண்டதாகச் சொன்னார்கள்.

பிரபாகரர்: அப்படியா! அப்படி என்னவிதமான அடையாளங்களைக் கண்டார்கள்? விபரமாகச் சொல்லும்.

ஊர்ஜனம் 2: தலையில் சந்திரனுடைய குறியையும், நெற்றியில் 3வது கண்ணின் குறியையும், தோள்களில் சூலாயுதத்தின் அடையாளத்தையும் கண்டார்கள். உடல் ஸ்படிகம்போல வெண்ணிறமாய்

பிரகாசித்ததையும் கண்டார்கள். தவிரவும் மார்பில் பாம்பின் வடிவமும், காலில் சாமரமும், கைகளில் சக்கரமும், கதை, வில், டமருகம் முதலிய அடையாளங்களேயும் பார்த்து எல்லோரும் வியப்புற்ருர்கள்.

விஷ்ணுமித்திரர்: அவர் கைலாசபதியான ஸ்ரீபரமேச்வரரின் அவதாரம் என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லே. அவர் ஒரு நடமாடும் கற்பக விருக்ஷம் என்றே நான் நினேக்கிறேன்.

பிரபாகரர்: நண்பரே! தாங்கள் சொல்வது ரொம்பவும் சரி. தேவலோகத்திய கற்பக விருக்ஷம் இடம்விட்டுப் பெயராது. தான் இருக்கும் இடத்துக்கு வந்தவர்களுடைய வேண்டுகோளேப் பூர்த்தி செய்யும். ஆனல் இவரோ ஆங்காங்கு நடந்துசென்று விரும்பியவர்களுடைய விருப்பத்தை எல்லாம் நிறைவேற்றுகிருர். விருப்பம் ஒன்றும் இல்லாதவர்களுக்கும்கூட தன்னுடைய தர்ம ஞானேபதேசங்களால் சந்தோஷத்தை உண்டுபண்ணுகிருர்.

விஷ்ணுமித்திரர்: இரண்டாவது நாள் நடந்த வித்வத்சதஸில் எத்தனே அழகாக கம்பீரமாகப் பேசினர். கவனித்தீர்களா?

சாண்டில்யர்: ஆம்! ஆம்! வாக் விலாசத்தில் அவர் மிகுந்த வல்லமை உள்ளவர். வேத வித்யையில் பிரம்மதேவனுக்கும், வேத அங்கங்களின் ஞானத்தில் கார்க்கிய முனிவருக்கும், மறைகளின் பொருளே விளக்குவதில் பிருகஸ்பதிக்கும், வேதத்தின் கர்மகாண்டங்களே வர்ணிப்பதில் ஜைமினிக்கும், உபநிஷத்தின் அர்த்தத்தை அறிவதனல் உண்டாகும் ஆத்ம ஞானத்தில் வேத வியாசருக்கும் நிகராக அவர் விளங்கினர்.

ஊர்ஜனம் 1: பௌத்தர்களாலும், திகம்பரர்களாலும், பாசுபதர்களாலும், மற்றும் வேறு குதர்க்கங்கள் கூறுகின்ற நாஸ்திகர்களாலும், வேத மார்க்கம் அழிக்கப்பட்டது. அதைக் காப்பாற்றுவதற்காக மண்ணுலகில் அவதரித்த ஸ்ரீசங்கர பகவத்பாதர் சம்சாரிகளாகிய நம் போன்றவர்களுக்கு நன்மையைச் செய்துகொண்டு சஞ்சாரம் செய்துகொண்டிருக்கிருர்.

ஊர்ஜனம் 2: பொறுமையில் பூமா தேவியைப் போலவும், கல்வியறிவில் ஸ்கந்தப் பெருமானே போலவும், வைராக்யத்தில் சுகப்பிரம்மத்தைப் போலவும் விளங்குகிருர். எல்லா முனிவர்களுக்கும், மகுடமாக அவர் பிரகாசிக்கிருர்.

விஷ்ணுமித்திரர்: அன்றைய வித்வத் ஸதசில் எவ்வளவு தெளிவாக சொற்பொழிவாற்றினர். பிரும்மமாகிய பாலும், ஜகத்

தாகிற ஜலமும் ஒன்ருகக் கலந்திருக்கிறது. வெகு காலமாகப் பிரிக்க முடியாமல் இருந்த அந்த இரண்டையும் ஒரு ஹம்ஸம் போல பிரித்துக் காண்பித்ததினுல் அவர்தான் பரமஹம்சர்.

(அந்த சமயத்தில் பத்மாவதி வீட்டிற்குள்ளிருந்து வெளியில் வருகிருள். பிரபாகரர் எழுந்து அவள் அருகில்போய் பேசிவிட்டு வருகிருர்).

பிரபாகரர்: வருகிற துவாதசியன்று புத்திரகாமேஷ்டி யாகம் செய்வதாக ஸ்ரீ பகவத் பாதரின் ஆக்ஞைப்படி தீர்மானித்திருக்கிறது. இதை ஞாபகப்படுத்துகிருள் என் மனைவி. தாங்கள் எல்லோரும் கலந்துகொண்டு சிறப்பிக்கவேண்டும்.

சாண்டில்யர்: தங்கள் விருப்பப்படி எல்லோரும் கலந்து கொண்டு ஆசீர்வதித்து சிறப்பிப்பார்கள். தவிரவும் மூகாம்பிகை முதலிய பக்கத்து கிராமங்களிலிருந்தும் ரித்விக்குகள் வந்து கலந்து கொள்வார்கள். கவலை வேண்டாம்.

[ஊர் ஜனங்கள் எழுந்து விடைபெற்றுப் போகிருர்கள்.]

பத்மாவதி: ஆரிய புத்திரரே! ஹரதத்தன் இல்லாத வீடு ரொம்பவும் வெளியாக இருக்கிறது. அவன் வாய் திறந்து பேசா விட்டாலும், கிருஹத்தில் வளையவந்தது எவ்வளவு மகிழ்ச்சிகரமாய் இருந்தது. இப்போது அதுவும் இல்லை. புதுவெள்ளம் வந்து பழைய வெள்ளமும் போய்விட்டது.

பிரபாகரர்: பிரியே! அப்படிச் சொல்வது சரியல்ல. எல்லாம் நமது நன்மைக்கே நடைபெறுகின்றது.

விஷ்ணுமித்திரர்: அம்மா சொல்லுவதிலும் கொஞ்சம் உண்மை இருக்கிறது. ஹரதத்தன் மௌனமாய் இருந்தாலும் ஒரு ஆலயத்தில் விளங்கும் பகவத் விக்ரஹம் போல பிரகாசித்து வந்தான். கோவிலி லிருக்கும் மூர்த்தி நம்மிடம் பேசுகிருரா என்ன?

சாண்டில்யர்: ஆலயத்தில் இறைவன் பேசாமலிருந்தாலும் பக்தர்களின் மனம் லயமடைகிறது. நிம்மதி அடைகிறது. சந்தோஷ மடைகிறது தரிசன மாத்திரத்திஞலேயே.

பிரபாகரர்: அதுபோல் இங்கும் பெற்ருேர்கள் புதல்வனைப் பார்த்த மாத்திரத்திலேயே மகிழ்ச்சி அடைந்தார்கள். வாய் பேசா விட்டாலும் இதயம் பேசிக்கொண்டது.

விஷ்ணுமித்திரர்: நாம் ஒரு சிறிய வட்டத்திற்குள் இருந்து சுயநலத்தையே எண்ணக்கூடாது. பரந்த நோக்கும், விசாலமான

மனப்பான்மையும் வேண்டும். பல கோணங்களிலிருந்து ஆராய வேண்டும். ஹரதத்தனுடைய சிரேயசையும் பார்க்கவேண்டும். சான்றோர்களின் சேர்க்கையினால் அவனுக்கு ஏற்பட்ட நன்மையையும் நாம் கருத்தில் கொள்ளவேண்டும். அவன் ஹஸ்தாமலகர் என்ற தீக்ஷா நாமத்துடன் ஸ்ரீ சங்கர பகவத்பாதருக்கு சிஷ்யனாக ஆனதை யும் கவனிக்கவேண்டும். குருவினுடைய கருணை அவனுக்குப் பரிபூரணமாக ஏற்பட்டிருக்கிறது.

சாண்டில்யர்: அநேக பிறவிகளில் செய்த எண்ணில்லாத புண்ணிய கர்மாக்களால் அடையக்கூடிய நான்காவது ஆச்ரமத்தை அடைந்து நட்சத்திரங்களுக்கு மத்தியில் துருவன் பிரகாசிப்பதுபோல மற்ற சிஷ்யர்களுக்கு மத்தியில் எல்லோராலும் புகழ்ந்து பேசக்கூடிய பதவியை அடைந்து விளங்குகிறான். காஷாய வஸ்திரத்தை அவன் அணிந்துகொண்டபோது சிவந்த தளிரினால் அலங்காரம் செய்யப்பட்ட இமயமலையைப்போல பிரகாசித்தான்.

பிரபாகரர்: நடப்பது எல்லாம் நன்மைக்குத்தான். பிரும்ம சூத்திரத்திற்கு நான் எழுதிய விருத்தியைப் பார்த்துத் தரவேண்டும் என்று நான் விக்ஞாபித்தேன். சிருங்கேரிக்கு வரச்சொல்லிவிட்டார்கள் ஸத்குருநாதர்.

சாண்டில்யர்: என்னிடமும் சொன்னார்கள். விஜய யாத்திரை முடிந்து சிருங்கேரிக்கு போவதற்கு இரண்டு வருஷங்கள் ஆகும் என்றும் அந்த சமயத்தில் அவசியம் எல்லோரும் வரவேண்டும் என்றும் உத்தரவு செய்தார்கள்.

விஷ்ணுமித்திரர்: இனியும் இரண்டு வருஷங்கள் இருக் கின்றனவே. நாளை நடப்பதை யார் அறிவார்? பகவத்க்ருபையால் யாகமும் பூர்த்தியாகி தம்பதிகளின் விருப்பமும் நிறைவேறி கைக் குழந்தையுடன் சிருங்கேரிக்குப் போவதற்கு ஆசார்ய ஸ்வாமிகள் அநுக்ரஹம் செய்யட்டும். (கோவில் மணி அடிக்கிறது).

சாண்டில்யர்: நல்ல நிமித்தம்தான். ஆசை நிறைவேறும் அதோ பாரும் கருடனும் வட்டமிடுகிறார்.

பத்மாவதி: (அவர்களுக்கு முன்னால் நமஸ்காரம் செய்கிறாள்.) தங்கள் ஆசிர்வாதம் அடியாள் பாக்கியம்.

பிரபாகரர்: எல்லாம் சுபமாகவே நடக்கும், கவலைப்பட வேண்டாம். யாகத்திற்கு வேண்டிய யத்தனங்களை செய்வோம்.

(திரை விழுகிறது)

முதலாவது அங்கம் முற்றும்

# இரண்டாவது அங்கம் காட்சி 1

(திரை பின்னல்)

" நாராயணம் பத்மபுவம் வசிஷ்டம்
சக்திஞ்ச தத்புத்ர பராசரம் ச |
வியாஸம் சுகம் கௌடபதம் மஹாந்தம்
கோவிந்த யோகீந்தரமதாஸ்ய சிஷ்யம் ||

ஸ்ரீசங்கராசார்ய மதாஸ்ய பத்ம
பாதஞ்ச ஹஸ்தாமலகஞ்ச சிஷ்யம் |
தம் தோடகம் வார்த்திககாரமன்யான்
அஸ்மத்குரூன் சந்த்தமானதோஸ்மி || "

இந்த ஸ்லோகம் பாடப்படுகிறது.

(திரை தூக்கப்பட)

சிருங்கேரியில் ஸ்ரீசாரதாம்பாள் கோவில் தென்படுகிறது. முன் மண்டபத்தில் பிரபாகரர், விஷ்ணுமித்ரர், சாண்டில்யர், முதலியோர் உட்கார்ந்து சம்பாஷித்துக் கொண்டிருக்கிறார்கள். பக்கத்தில் ஒரு தூண் ஓரமாக பத்மாவதி தன் 2 வயதான ஆண் குழந்தையுடன் நின்றுகொண்டிருக்கிறாள். அம்பாள் தரிசனத்திற்கு ஆண்களும், பெண்களும் வந்து போய்க்கொண்டிருக்கிறார்கள்.

பிரபாகரர் : நண்பர்களே! மூன்று உலகங்களிலும் ஒரு அம்சத்திலும்கூட இவருக்கு நிகராக இருக்கும் ஒரு வித்வானை நான் அறியவில்லை. தனக்குத்தானே நிகராக விளங்குகிறார்.

விஷ்ணுமித்திரர் : ஆமாம், நண்பரே. ஸ்ரீசங்கரருடைய வாக்கு, மனம் என்னும் மத யானையை அடக்குகின்ற சங்கிலி. துஷ்ட வாதங்களாகிய அழுக்குகளை அகற்றும் தண்ணீர் பெருக்கு. கவலைக் கூட்டங்களை பஞ்சுபோல பறக்க அடிக்கின்ற மாருதம். சம்சார சாகரத்தை தாண்டுவதற்குரிய தோணி.

சாண்டில்யர் : ஆமாம். ஆமாம்! அதுமட்டுமா! அவருடைய வாக் விலாசம், ஞானம் என்னும் அரசன் அமரத்தக்க அரியணை, அறிஞர்களால் போட்டி போட்டுக்கொண்டு கழுத்தில் அணியப்பெறும் முத்துமாலை, மறைகளால் விளங்குகின்ற மகிமை உள்ளது. அத்வைத லக்ஷ்மியின் வெற்றி விருதை தெரிவிக்கின்ற கண்டாமணி யின் ஓசையாகவும் விளங்குகிறது.

பத்மாவதி : அவரது சொற்கள் திராக்ஷை, தேன், சர்க்கரை போன்றவைகளுக்கு சமமான சுவையுடன் பஞ்சாமிர்தமாய் இனிக்கின்றன. என் போன்றவருக்கும் விஷயங்களை எளிமையாக எடுத்துரைத்து விளங்கும்படிச் செய்து ஆனந்தத்தை அளிக்கின்றது; தெளிவையும் தருகின்றது.

பிரபாகரர் : பகவத்பாதரின் கருணைக்கு ஈடுஇணையே கிடையாது! என்னுடைய உரை நூலையும் பார்வையிட்டு அனுக்ரகித்தார்கள். தவிரவும் ஆனந்தமய அதிகரணத்திலுள்ள சூத்திரங்களின் கருத்துக்களை நன்கு ஆராய்ந்து இன்று சித்தாந்த விளக்கம் செய்யவும் இசைந்திருக்கிறார்கள்.

பத்மாவதி : அவர் கிருபா ஸாகரமாகும், அவர் தந்த பிச்சையாகிய இந்தக் குழந்தையை எவ்வளவோ அன்போடும் கருணையோடும் கடாக்ஷித்து ஆசீர்வதித்தார்கள் பார்த்தீர்களா !

சாண்டில்யர் : ஆன்ஹிகம் முடித்து கோவிலுக்கு எழுந்தருளு வார்கள் என்று சிஷ்யர்கள் தெரிவித்தார்கள்.

விஷ்ணுமித்ரர் : இப்போது எழுந்தருளுகிற நேரம்தான். நாம் தயாராக இருப்போம்.

(சிஷ்யர்கள் கட்டியம்கூற ஸ்ரீசங்கரபகவத்பாதர் எழுந்தருளு கிறார்கள். ஸனந்தனர், ஸுரேசுவரர், ஹஸ்தாமலகர் முதலிய சீடர்களும் பிரவேசிக்கிறார்கள். எல்லோரும் எழுந்து வந்தனம் செய்கிறார்கள். ஒரு புறத்தில் ஆசனங்கள் இடப்பட்டு அதில் அமருகிறார்கள். ஸத்குருவின் அனுமதிபெற்று எல்லோரும் உட்காருகின்றனர். பிரபாகரரை அழைத்து அருகில் வைத்துக் கொள்கிறார்கள். குறிப்பிட்ட சூத்ரவிசாரம் ஆரம்பமாகிறது.)

ஸ்ரீசங்கர பகவத் பாதர் : ஹே! பண்டித வர்யா: மஹாசயா: ! தைத்திரீயோஉபநிஷத்தில் ''தஸ்மாத்வா ஏதஸ்மாத் விஜ்ஞானமயாத் அன்யோந்தர ஆத்மானந்தமய: । தேனைஷ பூர்ண: ।'' ஸ வா ஏஷ புருஷவித ஏவ । தஸ்ய புருஷவிததாம் । அன்வயம் புருஷவித: । தஸ்ய ப்ரியமேவ சிர: । மோதோ தக்ஷிண: பக்ஷ: । ப்ரமோத உத்தர: பக்ஷ: । ஆனந்த ஆத்மா । ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்ட்டா'' என்று படிக்கப்படும் வாக்கியம் இந்த அதிகரணத்துக்கு விஷயம். இங்கு குறிப்பிடப்படும் ஆனந்தமயன், சம்சாரியான ஜீவனா ? அல்லது

ப்ரஹ்மமா ? என்று சந்தேகம். ஆனந்தமயன் சம்சாரி என்னும் கருத்தை முதலில் ஸனந்தனர் விவரிப்பார்.

ஸனந்தனர் : ஏது நியாயம் ? ஆனந்தமயன் சம்சாரி என்பதா ? அல்லது பரப்ரஹ்மம் என்பதா ? இந்தக் கேள்விக்கு எனது தாழ்மையான பதில் ஆனந்தமயன் சம்சாரியான ஜிவன் என்பதே ஆகும். ஏனென்றால் அவனையும் அன்னமயம் முதலான முக்கியமில்லாத ஆத்மாக்களின் வரிசையில் (பிரவாஹத்தில்) கூறப்பட்டு இருப்பதினாலும், ப்ரியம், மோதம், ப்ரமோதம் என்ற தலை. வலதுபக்க, இடதுபக்க இறக்கை என்று அவயவங்கள் கூறியிருப்பதாலும், சரீரத்திலிருக்கும் தன்மை சொல்லப்பட்டிருப்பதாலும் [தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா! ய: பூர்வஸ்ய] மயட் என்ற ப்ரத்யயம் (விகாரமுடையது) அமைந்த சப்த ப்ரயோகம் செய்திருப்பதாலும் பரப்ரஹ்மம் ஆகமுடியாது. ஆகையால் ஆனந்தமய ஆத்மா சம்சாரிதான் என்பதுதான் நியாயமாகும்.

பிரபாகரர் : பெரியோர்களே ! இதை நான் வெகுவாக ஆட்சேபிக்கிறேன். ஆனந்தமயன் பரப்பிரஹ்மமாய் இருப்பதுதான் நியாயம். இதை உறுதிப்படுத்தியே, பூஜ்ய வியாசாசாரியார் இந்த அதிகரணத்தில் எட்டு சூத்திரங்கள் இயற்றி இருக்கிறார்கள். ஒவ்வொரு சூத்திரமாக விவரித்து பதில் கூறுகிறேன்.

முதல் சூத்திரம்:— ''ஆனந்தமயோப்யாஸாத்'' ஆனந்தமயன் பரப்பிரஹ்மமாக இருப்பதுதான் சரி. ஏன்? அப்பியாஸத்தினால், ஆனந்தமயனைப் பற்றி பலதடவை திரும்பத் திரும்ப சொல்லப்பட்டிருக்கிறது. ஆனந்தமயனைத் தொடங்கி ''ரஸோ வை ஸ:'' என்றும், 'ரஸம் ஹி ஏவாடயம் லப்த்வா ஆனந்தீ பவதி' என்றும், 'யதேஷ ஆகாச: ஆனந்தோ ந ஸ்யாத் ஏஷ ஹிஏவ ஆனந்தயாதி' என்றும், 'ஸைஷா ஆனந்தஸ்ய மீமாம்ஸா பவதி' என்றும், 'ஏதம் ஆனந்தமயம் ஆத்மானம் உபஸங்க்ராமதி'' என்றும், 'ஆனந்தம் ப்ரஹ்மணோ வித்வான் ந பிபேதி குதஸ்சன'' என்றும் 'ஆனந்தோ ப்ரஹ்மேதி வ்யஜானாத்' என்றும், ப்ரஹ்மத்தினிடத்தில்தான் ஆனந்தம் என்ற சப்தம் பல தடவை அப்பியாசம் இருப்பதினால் ஆனந்தமய ஆத்மா பிரஹ்மமென்றே அறியப்படுகிறது.

சாண்டில்யர்: அன்னமய முதலிய பிரவாஹத்தில் சொல்லப்பட்டிருக்கிறதே! அது தோஷம்தானே?

பிரபாகரர்: அன்னமயம் முதலிய முக்கியமில்லாத ஆத்மாக் களின் வரிசையில் சொல்லப்பட்டது தோஷமில்லை. ஏனென்றால் முக்கியமாக ஆத்மாவை உபதேசிக்கும்போது சாஸ்திரமானது உலகத்திலுள்ள சாதாரண ஜனங்களின் புத்தியை அனுசரித்து மிகவும் மூடர்களாயிருப்பவர்களும் ஒப்புக்கொள்ளக்கூடிய அன்ன மயமான சரீரத்தை முதலில் ஆத்மா என்று சொல்லுகிறது. பிறகு கருமானுடைய உலையில் மூஷையில் விடப்பட்ட உருக்கின செம்பு ப்ரதிமையைப்போல் அதற்கும் உள்ளே, அதற்கும் உள்ளே என்று ப்ராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம் என்று ஆத்மா அல்லா ததை ஆத்மாவாகச் சொல்லுகிறது. கடைசியில் ஆனந்தமயனையே ஆத்மா என்று சொல்லி முடிக்கிறது. அதற்குப்பின் உள்ளே என்று ஒன்றும் கூறவில்லை.

சாண்டில்யர்: மற்றொரு உதாரணம்கூடக் கூறி நன்றாக விளக்கும்படி பிரார்த்திக்கிறேன்.

பிரபாகரர்: அப்படியே கூறுகிறேன். அருந்ததி நக்ஷத்ரத்தை காட்டும்பொழுது முதலில் நன்றாகத் தெரியக்கூடிய, அருகிலுள்ள வேறு பல நக்ஷத்திரங்களைக் காட்டி அதற்குப் பக்கத்தில் பக்கத்தில் என்று சொல்லி கடைசியாகக் காட்டப்படுகிற முக்கியமான நக்ஷத் திரமே அருந்ததியாக இருப்பதுபோல் பார்த்துக்கொள்ளவும். ப்ரியம் முதலியவைகளை அவயவமாகக் கற்பனை செய்வது ஒரு தோஷமில்லை. அவை உபாதியினால் ஏற்பட்டவைகளே. ஸ்வபாவத்தை சேர்ந்த தில்லை. சாரீரத் தன்மையும் சரீரம் மூலமாக வரிசையாகக் காட்டப் படுவதினாலேயே தவிர சாக்ஷாத்தாக சரீரத்திலிருக்கும் தன்மை யல்லை. ஆகையால் ஆனந்தமயன் பரப்பிரஹ்மம்தான்.

ஸனந்தனர்: நண்பரே! விகாரத்தைச் சொல்லும் மயட் சப்தத்திற்கு என்ன சொல்லுகிறீர்?

பிரபாகரர்: அதற்கு வியாசாச்சாரியார் தனி சூத்திரமே போட் டிருக்கிறார்கள்.

''விகார சப்தாத் நேதி சேத் ந ப்ராசுர்யாத்'' மயட் என்பதற்கு விகாரம் என்று அர்த்தம் இருப்பதால் ஆனந்தமய சப்தமும் விகாரத்தையே விஷயமாக உள்ளது என்று நினைக்க வேண்டாம். அது சரியில்லை. மயட் என்பதற்கு ப்ராசுர்யம் (அதிகமாக இருத்தல்) என்ற அர்த்தமும் உண்டு. ''தத்பிரக்ருத

வசனே மயட்'' என்று பாணினி சூத்ரம் இருக்கிறது. ''யாகம் அன்னமயம்'' என்று கூறும்பொழுது, அன்னம் ஏராளமாய் இருக்கிறது என்றுதானே பொருள். அதுபோல ஆனந்தம் அதிகமாய் இருக்கும் பிருஹ்மம் ஆனந்தமயம் என்று சொல்லப் படுகிறது. மனுஷ்யானந்தம் தொடங்கி மேல் மேல் உள்ள ஸ்தானத்தில் நூறு நூறு மடங்கு ஆனந்தம் அதிகமாகிறது என்று சொல்லி பிருஹ்மானந்தத்திற்கு மேல் உயர்வு கிடையாது என்று தீர்மானித்திருப்பதால் ப்ரஹ்மத்திற்கு ஆனந்தம் அதிகமாய் உள்ள தன்மை உண்டு. ஆகையால் மயட் என்ற சப்தம் அதிகம் என்ற அர்த்தத்தில்தான் வருகிறது. தவிர பின்வரும் சூத்திரத்தினுலும் இது தெளிவாகிறது.

சாண்டில்யர்: அது என்ன சூத்திரம்? விபரமாகச் சொல்லுங்கள்.

பிரபாகரர்: அப்படியே ஆகட்டும்.

''தத் ஹேதுவ்யபதேசாச்ச''

அதாவது பிருஹ்மம் ஆனந்தத்திற்கு ஹேது (காரணம்) என்று சுருதி சொல்லுகிறது. 'ஏஷ ஹ்யேவாநந்தயாதி' இவரல்லவோ ஆனந்தப்படுத்துகிருர் என்று. எவர் பிறரை ஆனத்தப்படுத்து கிருரோ அவர் அதிகமாக ஆனந்தமுள்ளவராக இருப்பார் என்பது எல்லோரும் அறிந்ததே. உலகில் எவன் மற்றவர்களுக்கு தனத்தை வாரி வழங்குகின்ருனே, அவன் அதிகமான பணம் உள்ளவன் என்பது எப்படி அறியப்படுகின்றதோ அவ்விதமே இங்கேயும் காண்க. ஆகையால் பிராசுரியம் (அதிகம்) என்ற பொருளிலும் மயட் ப்ரத்யயம் சம்பவிப்பதால் ஆனந்தமயன் பரமாத்மாதான். மேலும் அடுத்த சூத்திரம்

''மாந்த்ரவர்ணிகமேவ ச கீயதே''

(மந்த்ர வர்ணத்தில் கண்டதுதான் சொல்லப்படுகிறது.) இதனுலே யும் ஆனந்தமயன் பரமாத்மாதான்.

விஷ்ணுமித்திரர்: அந்த மந்த்ரவர்ணங்களை விபரமாகச் சொல்லும்படி கேட்டுக்கொள்கிறேன்.

பிரபாகரர்: அப்படியே சொல்லுகிறேன், ''பிரும்மவித் ஆப்னேதி பரம்'' என்று தொடங்கி, ''ஸத்ய ஞானம் அனந்தம் ப்ருஹ்ம'' என்று விவரித்து எதிலிருந்து ஆகாசம் முதலான சராசர பூதங்கள் உண்டாயினவோ, எது அவைகளை சிருஷ்டித்து

அவற்றினுள் புகுந்து, ஹ்ருதய குகையில் நிலைபெற்றிருக்கின்றதோ எல்லாவற்றிகும் உள்ளே உள்ளதாக இருக்கிறதோ, எதை அறிவதற்காக உள்ளே வேறு ஆத்மா என்று தொடக்கப்பட்டதோ அந்த பரமாத்மாவே, இங்கே வேருகவும் ஆந்தரனுகவும் உள்ள ஆத்மா ஆனந்தமயன் என்று உபதேசிக்கிறது. மந்திரம், ப்ராஹ்மணம் இவை இரண்டிற்கும் ஒரே விதமான பொருள் கொள்வது தான் பொருந்தும். அவ்விதம் செய்யாவிடில் பிரகிருதமாய் உள்ளதை விடுவது, பிரகிருதமற்றதை எடுப்பது என்ற இரண்டு தோஷங்கள் ஏற்படும். தவிரவும் ஆனந்தமயனைக் காட்டிலும் வேருகவும், ஆந்தரமுமான ஆத்மா சொல்லப்படவில்லை. 'ஸைஷா பார்க்கவீ வாருணீ வித்யா' வருணனால் உபதேசிக்கப்பட்டதும், ப்ருகுவால் அறியப்பட்டதுமான இந்த ஆத்ம வித்யை இந்த ஆனந்தத்திலேயே முடிவும் பெறுகிறது. ஆனதுபற்றியும், ஆனந்தமயன் பரமாத்மாவே ஆவான்.

விஷ்ணுமித்திரர்: இவ்வளவு முக்கியமான சுருதிகள் இருக்கும் பொழுது இவருடைய கருத்தை எப்படி மறுக்கமுடியும்?

ஸுரேசுவரர்: நண்பரே! கொஞ்சம் பொறுத்துக்கொள்ளுங்கள். பூர்வபக்ஷம் முடியட்டும். பிறகு பார்க்கலாம்.

பிரபாகரர்: அடுத்த சூத்திரம்.

"நேதரோ அனுபபத்தே:"

(மற்றவன் இல்லை. பொருத்தமில்லாததினுல்)

இதனுலும் ஆனந்தமயன் பரமாத்மாதான் என்று நிச்சயிக்கப்படுகிறது. ஆனந்தமயனை சொல்லத் தொடங்கிய வேதமானது, அவர் "நான் பலவாக ஆவேன், பிறப்பேன் என்று ஆசைப்பட்டார். ஆலோசனை செய்தார், ஆலோசனை செய்துவிட்டு இது என்று சொல்லப்படும் எல்லாவற்றையும் சிருஷ்டித்தார், என்று சொல்லுகிறது. அவ்விடத்தில் சரீரம் முதலியது உற்பத்தி ஆவதற்கு முந்தி ஆலோசனை. சர்வ காரியங்களின் சிருஷ்டி ஆகியவை பரமாத்மாவிற்குத்தான் பொருந்தும். மற்றவனுன சம்சாரியான ஜீவனுக்கு பொருந்தவே செய்யாது.

விஷ்ணுமித்திரர்: நண்பரே! இதுவரைக்கும் ஐந்து சூத்திரங்களுக்கு பொருள் கூறினீர்கள். மேலும் உள்ள மூன்று சூத்திரங்களுக்கும் அர்த்தம் சொல்லவேண்டியதிருக்கிறது.

பிரபாகரர்: அவைகளுக்கும் பொருள் விபரமாக கூறுகிறேன்.

'பேத வ்யபதேசாச்ச' என்ற சூத்திரத்தினுலும் ஆனந்தமயன் சம்சாரி அல்ல. ஏனென்ருல் ஆனந்தமயனைச் சொல்லுமிடத்தில் "ரஸோவை ஸ: ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆனந்தீ பவதி" என்பதால் ஜீவனையும் ஆனந்தமயனையும் வெவ்வேருக குறிப்பிடு கிறது. அடைகிறவன் ஒருபோதும் அடையப்படுகிறவனுக இருக்க முடியாது. அதனுல் தேகம் முதலியதாக ஏற்பட்டிருக்கும் ஆத்மாவிற்கு வேருக விசாரித்து அறியப்படாத ஆத்மா, அறியப்பட வேண்டியவனுகிருன். எப்படியென்ருல் தரையிலிருந்துகொண்டு மந்திரவித்தை காட்டும் உண்மையான மாயாவி தோல், கத்தி, முதலிய ஆயுதங்களுடன் நூலேணி வழியாக ஆகாயத்தில் ஏறிக் கொண்டிருக்கும் பொய்யான மாயாவியைக் காட்டிலும் வேருனவன் தானே. தவிரவும் குடம் முதலிய உபாதியினுல் குறைவடைந்த குடாகாசத்தைக் காட்டிலும் குறைவற்ற உபாதியற்ற ஆகாசம் வேருகத்தானே இருக்கின்றது. இவ்விதமே இத்தகைய விக்ஞான ஆத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் உள்ள பேதத்தை குறிப்பிட்டு "நேதரோனுபபத்தே: பேதவ்யபதேசாச்ச" என்ற சூத்திரங்கள் கூறுகின்றன.

சாண்டில்யர்: இந்த திருஷ்டாந்தத்தில் ஒரு சந்தேகம். நூலில் ஏறின மாயாவியின் சொரூபமே பொய்யாகும். ஆனுல் ஜீவனிடத்தில் சொரூபம் கல்பிதமன்று. ஜீவனிடத்தில் பேதம் மட்டுமே கல்பிக்கப் படுகிறது.

பிரபாகரர்: இதில் தோஷம் ஒன்றும் இல்லை. இங்கே கல்பிதமாக ஆகும் அம்சத்தில் மட்டுமே திருஷ்டாந்தம் கூறப்பட்டது. தவிரவும் "காமாச்ச நானுமானுபேக்ஷா" என்ற சூத்திரத்தினுல் சாங்கியரால் அனுமானத்தால் கல்பிக்கப்படுகிற அசேதனமான ப்ரதானமும், ஆனந்தமயன் அல்ல என்று சொல்லப்படுகிறது. உபஸம்ஹாரமாக "அஸ்மின், அஸ்யச தத்யோகம் சாஸ்தி" என்ற சூத்திரத்தினுல் ஆனந்தமய சப்தம், ப்ரதானத்திலோ, ஜீவனிடத்திலோ பொருத்தமாகாது. ஏனென்ருல் அதில் ப்ரக்ருதமான ஆநந்தமய ஆத்மாவில் அறிந்துகொண்ட இந்த ஜீவனுக்கு (தத்யோகம்) அத்துடன் சேருவதை கூடுவதை-சுருதி விதிக்கிறது. (சாஸ்திரமானது சொல்லுகிறது). தத்யோகம் என்பது மோக்ஷம். அதன் தன்மையை அடைதல், எப்பொழுது எவ்வித

பேதமுமின்றி பிரிதலில்லாத உருவத்துடன் நிலைபெறுகின்றனோ, அப்பொழுது சம்சார பயத்தினின்றும் விடுபடுகின்றன். ஆகையால் ஆனந்தமயனை பரமாத்மாவாகக் கொண்டால்தான் இது பொருந்தும். ஆனந்தமயனை ப்ரதானமாகவோ, ஜீவனாகவோ கொண்டால் பொருந்தாது. ஆகவே ஆனந்தமயன் பரமாத்மா என்று சித்தித்து விட்டது. ஜகத்குருவே! என் சிற்றறிவுக்கு எட்டிய வரையிலும் இந்த சூத்திரங்களுக்குப் பொருள் கூறியிருக்கிறேன். தாங்கள் ஹம்சத்தைப்போல குற்றம் நீக்கி குணங்களை எடுத்துக்கொண்டு கருணையோடு ஆசீர்வதிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

ஸ்ரீசங்கர பகவத் பாதர் : மகாவித்வானே! தங்களுடைய வியாக்யானம், உபநிஷத்தின் தாத்பர்யம் அல்ல. பிரகிருதத்தில் ஸகுண ப்ரஹ்மத்தைப்பற்றிச் சொல்ல வரவில்லை. ஆனந்தமயன் ஜீவன், இவனுக்கு ஆதாரமான, நிர்விசேஷமான (நிர்குணமான) பரப்பிருஹ்மத்தை சொல்வதில்தான் உபநிஷத்துக்கு தாத்பர்யம். இதுவேதான் சூத்திரக்காரரின் உண்மையான அபிப்ராயமும் ஆகும்.

பிரபாகரர் : அப்படியாயின் தங்களுடைய உரையை கேட்பதற்கு மிகுந்த ஆவல் உள்ளவர்களாக இருக்கிறோம். கருணை கூர்ந்து அனுக்கிரஹம் செய்யவேண்டும்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் : அன்னமயன், பிராணமயன், மனோமயன், விக்ஞானமயன் இவர்களுக்கு பிருஹ்மத்தன்மை இல்லை யென்பது எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடியதே. ஆனந்தமயனைப் பற்றித்தான் இங்கு வாதம். அன்னமயனைக் காட்டிலும் வேறுபட்டவனும், அவனுக்கு உள்ளிருப்பவனுமாகிய ஆத்மா ப்ராணமயன். இந்தப்படி அததற்கு உள்ளே உள்ளே வெவ்வேறாக ஆத்மா ஆனந்தமயனைத் தவிர மற்றவர்களுக்குச் சொல்லப்படுகிறது. ஆனந்தமயனுக்கு உள்ளே வேறு ஆத்மா எதுவும் சொல்லப்படவில்லை. ஆனாலும் அவனுக்கு பிருஹ்மத் தன்மை கிடையாது. ஏனென்றால் அவனுக்கு அவயவங்கள் சொல்லப்படுகிறது. அவனுக்கு பிரியமே தலை, மோதம் வலது பக்கம், ப்ரமோதம் இடது பக்கம், ஆனந்தம் சரீரம், பிரஹ்மம் ஆதாரமாகிய ப்ரதிஷ்டை என்று சொல்லப்படுகிறது. ஸத்யம், ஞானம், அனந்தம் பிருஹ்ம என்று விவரிக்கப்பட்ட பிருஹ்மம்தான் இங்கு ஆதாரம் பிரதிஷ்டை என்று சொல்லப்படுகிறது. அதை தெரிந்துகொள்வதற்குத்தான் அன்னமயன் முதல் ஆனந்த மயன் ஈறாக ஐந்து கோசங்கள் கல்பிக்கப்படுகின்றன.

பிரபாகரர் : ''பிருஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா'' புச்சம் (வால்) என்று அவயவமாக அல்லவா சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி இருக்கத் தானுகவே பிருஹ்மத்திற்கு ப்ரதானத் தன்மை எப்படி அறியமுடியும் ?

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் . ஆதி முதல் பிரஹ்மத்தைப்பற்றி சொல்லும் பிரகரணமாக இருத்தலே அதன் காரணம் ஆகும். பிரகிருதமாய் இருப்பதால் அதுவே சரி என்கிருேம்.

பிரபாகரர் : ஆனந்தமயத்துக்கு அவயவமாய் ப்ருஹ்மம் அறியப்பட்டாலும், ஆனந்தமயமே பிருஹ்மமாய் இருப்பதால் என்ன தோஷம் வரப்போகிறது ?

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் : அதே பிருஹ்மம் புச்சமும் ப்ரதிஷ்டையுமான அவயவமாக ஆகிறது. அதே பிருஹ்மம் ஆனந்தமயனுக அவயவியுமாக ஆகிறது. அதாவது ஒன்றையே அங்கியாகவும் அங்கமாகவும் சொல்லுவது பொருந்தாது.

பிரபாகரர் : இரண்டில் ஏதாவது ஒன்றில் பிருஹ்மத்தை ஒப்புக்கொள்ளவேண்டுமானுல் ஆனந்தமயனிடத்திலேயே ஒப்புக் கொள்ளலாமே.

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் : அப்படியன்று. பிரஹ்ம புச்சம் பிரதிஷ்டை என்ற இடத்திலேயே, பிருஹ்மம் என்ற சப்தம் சேர்ந் திருப்பதினுல் அங்கே பிருஹ்மத்தை குறிப்பிடுவதுதான் நியாயம். ஆனந்தமய வாக்கியத்தில் பிருஹ்மம் என்ற சப்தம் இல்லாததினுல் எடுத்துக்கொள்வது நியாயம் இல்லை. தவிரவும் மயட் என்ற சப்தத் திற்கு விகாரம் என்ற அர்த்தம்தான் பொருந்தும். அந்த அர்த்தத் திலேயே, மயட் என்ற சப்தத்தின் பிரவாஹம் இருந்து வருகிறது. திடீரென்று இந்த ஆனந்த மயனிடத்தில் மட்டும் அர்த்த ஜரதீய நியாயம் (பாதிக்கிழடு) என்ற முறையை பின்பற்றி மயட் என்ப பதற்கு அதிகமாய் உள்ளது என்று அர்த்தம் சொல்லுவது சரியல்ல. அதிகம் என்று சொல்லும்பொழுது அதற்குமாருக உள்ளது கொஞ் சம் இருக்கிறது என்று அர்த்தம் ஏற்படுகிறது. அப்போது பிருஹ் மத்தினிடம் ஆனந்தம் அதிகமாகவும், துக்கம் கொஞ்சமாகவும் இருக்கும் என்று அர்த்தம் சொல்லவேண்டிவரும். இது ''யத்ர நான்யத் பச்யதி நான்யத் ச்ருணோதி நான்யத்விஜானுதி ஸபூமா'' என்ற சுருதிக்கு முரண்படும். சத்தியம், ஞானம், அனந்தம் பிருஹ்ம

என்ற சுருதியினல் பிரும்மத்திற்கு தேசத்தாலும், காலத்தாலும் வஸ்துவாலும் பரிச்சேதம் கிடையாது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பிரபாகரர் : ஸோகாமயத என பிருஹ்மத்தினிடத்தில் பும்லிங்கம் கூறப்பட்டிருப்பது பொருந்துமா?

ஸனந்தனர்: அது தோஷமாகாது. ''தஸ்மாத்வா ஏதஸ்மா தாத்மன ஆகாச: ஸம்பூத:'' என்ற இடத்தில் பும்லிங்கமான ஆத்ம சப்தத்தால் பிரஹ்மமே சொல்லப்பட்டிருக்கிறது.

பிரபாகரர்: நான் பலவாக ஆவேன். பிறப்பேன் என்று அவர் ஆசைப்பட்டார்'' என்று ஆனந்தமயத்துக்கு சமீபத்தில் சொல்லப்பட்டிருக்கிறதே?

ஸ்ரீ சங்கரபகவத்பாதர்: இது ''ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா'' என்பதற்கு இன்னமும் சமீபத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

பிரபாகரர்: ஆனந்தமயன் ப்ரஹ்மமில்லையானல் இங்கு ப்ரஹ்ம ப்ராப்தி என்ற பலன் சொன்னதாக ஆகாதே?

ஸ்ரீசங்கரபகவத்பாதர்: ஆனந்தமயனையடைவதாகக் குறிப் பிடுவதாலேயே அதற்கு ஆதாரமாக, பிரதிஷ்டையாக உள்ள ப்ரஹ்மத்தையடைவதும் குறிப்பிடப்பட்டதாக ஆகிறது. தவிர உபஸங்க்ரமணம் என்பதற்கு ப்ரஹ்மப்ராப்தி என்று பொருளில்லை. அன்னமயாதிகளிலுள்ள ஆத்மபுத்தியை விடுவது என்பதுதான் சரி யான அர்த்தம். தவிறவும் 'பிரஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா' என்று சொன்ன பிறகு 'ததப்யேஷ ஸ்லோகோ பவதி' அஸந்நேவ ஸ பவதி। அஸத் ப்ரஹ்மேதி வேத சேத்। அஸ்தி ப்ரஹ்மேதி சேத் வேத। ஸந்தமேனம் ததோ விதுரிதி' என்று படிக்கப்படுகிறது. அதாவது பிருஹ்மத்தை இல்லாதது என்று எண்ணுவானேயானல் அவன் இல்லாதவனுகவே ஆகிருன் பிருஹ்மம் இருக்கிறது என்று அறிந்தா னேயானல் அதனல் இவனே இருக்கிருன் என்று எல்லோரும் அறிகிருர்கள். இங்கே ஆனந்தமயனே சேர்த்துக்கொள்ளாமலேயே பிருஹ்மத்தின் இருப்பையும் இல்லாமையையும் அறிவதற்கு குணமும் தோஷமும் சொல்லியிருப்பதால் பிருஹ்மத்திற்கு தானுகவே பிரதானத் தன்மை ஏற்படுகிறது. ஆனல் பிரியம் மோதாதிகளுடன் கூடிய ஆனந்தமயன் எல்லா ஜனங்களுக்கும் ப்ரசித்தமாக இருப்பதால், ஆனந்தமய ஆத்மா விஷயத்தில் இருக்கிறதா? இல்லையா? என்ற சந்தேகம் வருவதற்கு நியாயமே யில்லை அல்லவா?

பிரபாகரர்: என்ன இருந்தாலும் ''பிருஹ்ம புச்சம் பிரதிஷ்டா'' என்று அவயவமாக (புச்சமாக)த்தானே சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீசங்கர பகவத்பாதர்: அப்படியல்ல. வால் என்ற முக்யார்த்தம் இங்கு பொருந்தாது புச்சம் என்ருல் புச்சவத் புச்சம். ஆதாரம் என்று அர்த்தம். தாங்குவதுபோல் இருப்பதால் பிரதிஷ்டை ஏக நீடம் அதாவது மேலான அடையும் இடம். பறவைகள் தன் கூட்டை அடைவதுபோல, உலகத்திலுள்ள ஆனந்த சமூகத்திற்கு ஒன்ருய் ஒடுங்கும் கூடு. ப்ரஹ்மானந்தம் என்பது இதன் பொருள். அவயவத் தன்மை அல்ல'' ''மற்ற பிராணிகள் இந்த ஆனந்தத்தினது லேசத்தையே அனுபவித்து ஜீவிக்கின்றனர்'' என்று வேறு சுருதியும் இருக்கின்றது. மேலும் ''ஆனந்தமய'' என்ற பதம் அப்பியாசம் காணப்படவில்லை. பிராதிபதிகம் (ஆனந்தம் என்ற மூல சப்தம்) விஷயமாகத்தான் திரும்பத் திரும்ப சொல்லப்பட்டிருக்கிறது. அதனுல்தான் வேறு சுருதியிலும் 'விக்ஞானம் ஆனந்தம் பிருஹ்ம' என்று காணப்படுகிறது. ''யதேஷ ஆகாச ஆனந்தோ நஸ்யாத்'' என்பன ப்ரஹ்ம விஷயமான பிரயோகமே அல்லாது ஆனந்தமயனுடைய அப்யாஸமாக ஆகமாட்டாது.

சாண்டில்யர்: மற்றஸூத்ரங்களுக்கும் பொருள் கூறவேண்டுகிறேன்.

ஸ்ரீசங்கரபகவத்பாதர்: ''விகார சப்தாத் நேதி சேத் ந ப்ராசுர்யாத்'' என்றதற்கு இப்படி பொருள் கொள்ளவேண்டும். விகாரம் என்ருல் அவயவம் என்று அர்த்தம். புச்சம் என்ற அவயவ சப்தம் இருப்பதால் பிருஹ்மத்திற்கு ப்ரதானமான தன்மை இல்லை என்று சொல்லப்படுவதற்கு இந்த சூத்திரத்தினுல் பதில் சொல்லுகிருர். இது தோஷம் இல்லை. ப்ராசுர்யம் (அதிகமாய் இருக்கும் தன்மை) அவயவம் அதிகமாய் இருக்கையில் சொல்லுதல் என்று அர்த்தம். அன்னமயம் முதலியவைகளுக்கு சிரசு முதல் புச்சம் முடிய உறுப்புக்கள் சொல்லப்பட்டிருக்கும்பொழுது அதுபோல ஆனந்தமயனுக்கும் தலை, முதலான அவயவங்களை சொல்லி சர்வத்திற்கும் ஆதாரமான சுத்தப் பிருஹ்மத்தையும் சொல்லி இவ்விரண்டு பொருளும் ஒரே உபதேசத்தால் சித்திக்கவேண்டி 'பிருஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா, என்று உபதேசித்ததே ஒழிய ப்ரஹ்மமாக வாஸ்தவமான அவயவம் சொல்ல சுருதி எண்ணவில்லை. ஏனென்ருல் அப்யாசத்தினுல் ப்ருஹ்மத்திற்த் தானுகவே ப்ரதான தன்மை உண்டு என்பது உறுதி

செய்தாகிவிட்டது. ஆனந்தமயன் உட்பட எல்லா விகார சமூகத்திற்கும் பிருஹ்மம்தான் காரணம் என்று இந்த ''தத்ஹேதுவ்யபதேசாச்ச'' என்ற சூத்திரம் கூறுகிறது மற்ற சூத்திரங்களுக்கும் புச்சம் என்ற சர்வ ஆதாரமான பிருஹ்மத்தையே ப்ரதிபாதனம் செய்வதாக பொருத்தி உசிதம்போல பொருள் கண்டு கொள்ளவேண்டும்.

ஸனந்தனர் : பெரியோர்களே! ஜகத்குருவினுடைய விசதமான உரையினுல் ஆனந்தமயன் சம்சாரியான ஜீவன்தான் என்றும், இங்குள்ள எல்லா வாக்கியமும் நிர்விசேஷ ப்ருஹ்மத்தையே போதிக்கிறது என்றும், அதை ஒட்டியே சூத்திரங்களுக்கு பொருள் கொள்ள வேண்டும் என்றும் விரிவாக விளக்கப்பட்டது. இருந்த போதிலும் ஏதாவது சந்தேகங்கள் உண்டானுல் கேட்கலாம்.

சாண்டில்யர் : உள்ளங்கையில் இருக்கும் நெல்லிக்கனிபோல கருத்து தெளிவாக விளங்கிவிட்டது. சந்தேகம் ஒன்றுமில்லே.

பிரபாகரர் : நான் மிகவும் விநயத்துடனும், மகிழ்ச்சியுடனும் எனது தோல்வியை ஒப்புக்கொள்கிறேன். இதை நான் பராஜயமாகவே கருதவில்லே. பெறர்க்கரிய பேருகவே கருதுகிறேன். என்னுடைய ஸூக்திகளும், ஜகத்குருவின் பாஷ்யத்தில் சேருவதால் பூவோடு சேர்ந்த நாறும் மணம் பெற்றதுபோல் விளங்குமல்லவா? நான் தன்யனுனேன்.

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் : மஹா வித்வானே! தாங்கள் நினைப்பது போலவே தங்கள் அபிப்ராயமும் பாஷ்யத்தில் சேர்க்கப் படும், உபநிஷத்தின் நிர்ணயமான பொருள் மனதில் நன்ருக தைப்பதற்காக, பசுமரத்தாணிபோல பதிவதற்காக தங்களுடைய மதத்தை ஒட்டிய சூத்திர அர்த்தங்களே பூர்வபக்ஷ ரூபமாய் முதலில் அனுவதித்து தாங்கள் சொல்லுவதையே திரும்பவும் சொல்லி பின்னர் அதை மறுத்து சித்தாந்தம் செய்யப்படும்.

ஸுரேசுவரர் : நம் ஸத்குருநாதர் அருளிய சூத்திர பாஷ்யத்தை வேத வியாசரே நேரில் கேட்டு சரியாக இருக்கிறது என்றும் தன்னுடைய அபிப்ராயத்தையே விவரிக்கின்றது என்றும் அனுமோதித்து புகழ்ந்திருக்கிருர்கள். அதன் பெருமையை யாரால் அளவிட்டுக் கூறமுடியும்.

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் : இப்போது நம் முக்கிய சிஷ்யர் ஹஸ்தாமலகர் நிறைவுரை வழங்குவார். (இதைக் கேட்டவுடன் பிரபாகரர், பத்மாவதி இவர்களின் முகம் மகிழ்ச்சியால் பிரஸன்னமாகிறது).

ஹஸ்தாமலகர்: இந்த உபநிஷத்தில் ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களே பஞ்ச கோசங்களாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஸ்தூல சரீரம் அன்னமயகோசம், அன்ன சாரத்தால் உண்டாய், அன்னத்தால் வளர்வதால் அன்னமயம் எனப்படும், ஸூக்ஷ்ம சரீரம் ப்ராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், என்ற மூன்று கோசங்களாக இருக்கின்றது. ப்ராணாதி ஐந்து வாயுக்களும், வாகாதி கர்மேந்திரியங்களும் சேர்ந்து பிராணமயம் எனப்படும். கரண ரூபமான மனமும், ச்ரோத்திராதி ஞானேந்திரியங்களும் சேர்ந்து மனோமயம் எனப்படும். கர்த்தா ரூபமான புத்தியும், ஷ ஞானேந்திரியங்களும் சேர்ந்து விஞ்ஞானமயம் எனப்படும். அவித்தையிலுள்ள சத்துவ குணமும், இஷ்ட வஸ்துக்களின் தரிசன லாப போகங்களால், உண்டாகிய பிரியம், மோதம், ப்ரமோதம் என்னும் புத்தி விருத்திகளும் சேர்ந்து ஆனந்தமயம் எனப்படும். இந்த ஆனந்தமய கோசம்தான் காரண சரீரம். இப்படி பஞ்ச கோசங்களையும் வேறு பிரித்து அவைகளுக்கெல்லாம், அதிஷ்டானமும், ஆதாரமுமாகிய ப்ரஹ்மமே இங்கு புச்சம் என்று சொல்லப்படுகிறது. உபநிஷத்தின் உண்மையான அர்த்தத்தை சூத்திரங்களினாலும், நமது ஆசாரியாரின் பாஷ்யத்தினாலும் அறிந்து நாம் எல்லோரும் உய்யவேண்டும். இக்கருத்தை ஒரு பழம் பாடல் ரொம்ப அழகாகவும், எளிமையாகவும், தெளிவாகவும் சித்தரிக்கிறது.

அன்னமயகோசமிலா தான்ம ரூப மமர்பிராண கோசமிலா
தான்ம ரூபம்,
மின்னுமனோகோசமிலா தான்ம ரூபம், விஞ்ஞான கோசமிலா
தான்ம ரூபந்
துன்னு சுககோசமிலா தான்ம ரூபந் தொடர் பஞ்சகோச
மிலாதான்ம ரூபம்.
பின்னமுரு வான்மாவுக்கயலே யில்லை பிரிவெனவே
காண்பலெலமான்ம ரூபம்.

(கைகூப்பி வணக்கத்துடன் அவர் ''ஸத்குரு ஸ்வாமிந:'' என்று சொல்ல ''ஜய ஜய'' என்று எல்லோரும் கோஷிக்கிறார்கள்.)

ஸ்ரீ சங்கர பகவத்பாதர்: இத்துடன் இன்றைய வித்வத்சபை நிறைவு பெறுகிறது. எல்லோருக்கும் ஆசீர்வாதம். ''நாராயண நாராயண''. மங்களானி பவந்து.

[எல்லோரும் எழுந்து வந்தனம் செய்து, மங்களாட்சதை பெற்றுக்கொண்டு ஒவ்வொருவராகப் போகிறார்கள்.]

[திரை விழுகிறது]

## அங்கம் 2 காட்சி 2

(திரைக்குப் பின்னால்)

யஸ்மின் ஞாதே பவேத் ஸர்வம் விஜ்ஞாதம் பரமாத்மனி|
தம் வந்தே நித்ய விஜ்ஞானமாநந்தமஜமவ்யயம் ||
யதக்ஞானதபூத் த்வைதம் ஞாதே யஸ்மின் நிவர்ததே|
ரஜ்ஜு ஸர்பவதத்யந்தம் தம் வந்தே புருஷோத்தமம் ||
யஸ்யோபதேச தீதித்யா சிதாத்மா ந: ப்ரகாசதே|
நம: ஸத்குரவே தஸ்மை ஸ்வாவித்யாத்வாந்தபாநவே ||

(இந்த ஸ்லோகங்கள் பாடப்படுகின்றன)

(திரை தூக்கப்பட)

(சிருங்ககிரியில் நரசிம்ம வனம் தென்படுகிறது. ஒரு பெரிய வட விருக்ஷத்தின் அடியில் ஆசனங்கள் போடப்பட்டிருக்கின்றன. பிரபாகரர், பத்மாவதி, விஷ்ணுமித்திரர், சாண்டில்யர் முதலியோர் வருகின்றனர்.)

பத்மாவதி: நம் கிராமத்தில் அடுத்த வாரத்தில் பிரம் மோத்சவம் ஆரம்பமாகிறதே. நாம் போக வேண்டாமா?

பிரபாகரர்: கட்டாயம் போகவேண்டும். இப்பொழுது ஜகத் குரு ஸ்வாமிகளை பார்க்கும்பொழுது வந்தனம் செய்து விடை பெற்றுக்கொள்ள வேண்டியதுதான்.

விஷ்ணுமித்திரர்: நண்பரே! நானும் வந்துவிடுகிறேன். இவ்விடம் வந்து கிட்டத்தட்ட ஒரு மாதம் ஆகியிருக்கும். கிராமத் தில் ஏகப்பட்ட வேலை. உடன் போகவேண்டியது அவசியம்.

சாண்டில்யர்: நாம் எல்லோரும் சேர்ந்தே அனுமதி வாங்கு வோம். நாளை நல்ல தினம்தான் பிரயாணம் புறப்பட.

(ஸுரேசுவரர் வருகிறார்)

பிரபாகரர்: (வந்தனம் செய்து) ஸ்வாமி! எங்களுக்கு ஊருக்கு போகவேண்டும். மஹா ஸன்னிதானத்திடம் அனுமதி பெறுவதற்காக வந்திருக்கிறோம்.

ஸுரேசுவரர்: அப்படியா! ஜகத்குருவே சிறிது நேரத்தில் இங்கு எழுந்தருளப்போகிறார்கள்.

விஷ்ணுமித்திரர் : பழம் நழுவிப் பாலில் விழுந்தது. இங்கேயே இவ்விடத்திலேயே உத்தரவு வாங்கிக் கொள்ளலாம். ரொம்ப சந்தோஷம்.

சாண்டில்யர் : தேடிப்போன மூலிகை காலடியில் அகப்பட்டது போல ஜகத்குருவே இங்கே வருகிறார். இது ஒரு நல்ல சுப சூசகம். நமது பிரயாணம் வெற்றிகரமாக முடியும்.

ஸுரேசுவரர் : பெரியோர்களே! இன்று ஒரு முக்கியமான நிகழ்ச்சியும் இருக்கிறது. எல்லோரும் பல நாட்களாக ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தது.

பத்மாவதி: அது என்ன? நாங்கள் அறியலாமா?

ஸுரேசுவரர் : இன்று ஹஸ்தாமலகீய ஸ்லோகங்களுக்கு ஆசாரிய ஸ்வாமிகள் இயற்றியுள்ள பாஷ்யத்தை சிஷ்யகோடிகளுக்கு பாடம் சால்லப்போகிறார்கள். அதை நீங்கள் எல்லோரும் இருந்து சிரவணம் செய்துவிட்டு பின்னால் உத்தரவு வாங்கிக் கொள்ளலாம்.

பிரபாகரர்: கரும்பு தின்னக் கூலியா? அப்படியே செய்கிறோம்.

ஸுரேசுவரர் : இங்கே நீங்கள் எல்லோரும் சௌகரியமாக அமர்ந்திருங்கள். நான் ஆசிரமத்திற்குள் போய்விட்டு ஆசார்ய ஸ்வாமிகள் வரும்போது கூடவே வருகிறேன். [போகிறார்]

பிரபாகரர் : நண்பர்களே! பிரியே! மரக்கிளைகளிலுள்ள கிளிகளும், மைனாக்களும், குயில்களும் பேசுவதையும், பாடுவதையும் கவனித்தீர்களா?

(எல்லோரும் நிசப்தமாக இருந்து அதை கவனிக்கின்றனர். கிளிகள், மைனாக்கள், குயில்கள் சப்திக்கின்றன. இனிமையான குரல் எல்லோர் காதிலும் விழுகின்றது.

பத்மாவதி : என்ன ஆச்சர்யம்! அதோ இருக்கும் பச்சைக் கிளி ''ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம'' என்று சொல்கிறதே!

பிரபாகரர் : அதன் பக்கத்திலிருக்கும் பஞ்சவர்ண கிளி அதற்கு விரிவுரை சொல்வதுபோல ''ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்ம'' என்றும், ''அயம் ஆத்மா ப்ரஹ்ம'' என்றும்கூறுகிறதே.

விஷ்ணுமித்திரர் : இதோ பாருங்கள் அதிசயத்தை அந்த மைனு 'பிரஞ்ஞானம் ப்ரஹ்ம' என்றும் 'தத்த்வமஸி' என்றும் பாடுகின்றது

சாண்டில்யர் : அதற்கு உத்தரம் சொல்லுவதுபோல இந்த கருங்குயில் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்று இசைக்கின்றது. என்ன இனிமையான குரல்! கவனமாகக் கேளும்.

பிரபாகரர் : ரொம்பவும் அற்புதமாய் இருக்கிறது. வியாச பகவான் தன்னுடைய குமாரரான சுகரை விளித்தபோது பிரபஞ்ச மெல்லாம் ஏன் என்று கேட்கவில்லையா? அதுபோலவே இங்கும் ஜகத்குருவாகிய ஆச்சார்ய ஸ்வாமிகள் சிஷ்யர்களுக்கு உபதேசிக்கும் மஹா வாக்கியங்களை எல்லாம் கேட்டு இந்த பறவைகளும் மனப்பாடம் செய்துகொண்டு சப்திக்கின்றன. எல்லாம் ஆசாரியாளுடைய கிருபை. அவருடைய பெருமையே பெருமை.

(சிஷ்யர்கள் கட்டியம்கூற ஸ்ரீ சங்கர பகவத்பாதர் பிரவேசிக்கிருர்கள். கூடவே ஸுரேசுவரரும், ஸுரேசுவரரும் பல சிஷ்யர்களும், ப்ரசிஷ்யர்களும் வருகிருர்கள். எல்லோரும் ஸ்வாமிகளுக்கு வந்தனம் செய்துவிட்டு அவரவர்களுக்கு போடப்பட்டிருக்கும் ஆசனங்களில் அமர்ந்துகொள்ளுகிருர்கள் )

ஸனந்தனர் : (நமஸ்காரம் செய்து) குருநாதரே! ஹஸ்தாமலகர் சொன்ன ஸ்லோகங்களுக்கு தாங்கள் இயற்றிய பாஷ்யத்தை பாடம் கேட்பதற்கு எல்லோரும் ஆவலுடன் காத்திருக்கிருர்கள். தாங்கள் கிருபை செய்யவேண்டும்.

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் : மஹாவித்வான்களே! பிரிய சிஷ்யர்களே! இரண்டு வருஷங்களுக்குமுன் ஸ்ரீபலி கிராமத்தில் நான் ஹரதத்தரை (ஹஸ்தாமலகரை) பார்த்து 'நீ யார்?' என்று கேட்டவுடன் எப்பொழுதும் ஆத்மானுபவத்தில் மூழ்கியிருந்த அவரிடமிருந்து இந்த சுலோகங்கள் வெளிப்பட்டன. கிரந்தம் இயற்றவேண்டும் என்ற எண்ணத்துடன் அவர் இதைச் சொல்லவில்லை. அவருடைய அனுபவமே சுலோகங்களாக வெளிவந்தன. இத்தகைய சிறப்பையும், ஸ்வாரஸ்யத்தையும் கண்டு ஆனந்தம் அடைந்து நானே இதற்கு ஒரு பாஷ்யம் இயற்றினேன்.

ஸுரேசுவரர் : ஒரு சிஷ்யருடைய கிரந்தத்திற்கு குரு, வியாக்யானம் செய்திருப்பதை வேறு எங்கும் காணமுடியாது. இதுவே

முதல் தடவையாகும். கருணுமூர்த்தியான நம் பகவத்பாதர் சிஷ்யருடைய 12 சுலோகங்களுக்கும் வியாக்யானம் அருளி இருக்கின்ருர்கள்.

ஸனந்தனர் : இதிலிருந்தே ஹஸ்தாமலகீயத்தின் பெருமையை எல்லோரும் அறிந்துகொள்ளலாம். ஆசார்ய ஸ்வாமிகள் இந்த வியாக்யானத்தில் ஆத்ம தத்துவத்தை மிகவும் எளிமையாகவும், எல்லோரும் புரிந்துகொள்ளும்படியும நன்ருக விளக்கியிருக்கின்ருர்கள்.

ஸுரேசுவரர் : அந்த பாஷ்யத்தை இப்போது சுருக்கமாகச் சிஷ்யர்களின் நன்மைக்காக பாடம் சொல்லப் போகிருர்கள். எல்லோரும் நிசப்தமாக இருந்து சிரவணம் செய்யும்படி கேட்டுக் கொள்கிறேன்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் : மங்களானி பவந்து நீங்களும் கேள்விகள் கேட்டு சந்தேகங்களை நீக்கிக்கொள்ளவும்.

முதல் ஸ்லோகம் :

நிமித்தம் மநஸ்சக்ஷுராதி ப்ரவ்ருத்தௌ
நிரஸ்தாகிலோபாதி ராகாச கல்ப: ।
ரவிர் லோக சேஷ்டா நிமித்தம் யதா ய:
ஸ நித்யோபலப்திஸ்வரூபோऽஹமாத்மா ॥

முதலில் சுருக்கமாக இதன் பொருளைக் கூறுகிறேன். சூரியன், ஜனங்கள் தொழில் செய்வதற்கு எப்படி நிமித்தமாக அதாவது காரணமாக ஆகிருனே அப்படியே எல்லா உபாதிகளும் விலகின ஆகாசம் போன்ற எவர் — எந்த வஸ்து — மனம், கண் முதலிய இந்திரியங்கள் செயல்படுவதற்கு காரணம் ஆகிருரோ அந்த நித்ய. சுத்த ஞான வடிவான ஆத்மாவே நான்.

மனம், அஹங்காரம், புத்தி, சித்தம் என்ற நான்குவித அந்தக் கரணங்களுக்கும், அதுபோல கண், த்வக்கு, காது, நாக்கு, மூக்கு என்ற ஞானேந்திரியங்களுக்கும், அவ்விதமே வாக்கு, கை, கால், பாயு, |உபஸ்தம் என்ற கர்மேந்திரியங்களுக்கும் தன் தன் காரியத்தை செய்வதில் காரணமாக இருப்பது ஆத்மா. அந்த ஆத்மா அழியாத ஞானஸ்வரூபர். அந்த ஆத்மாவே நான்.

சிஷ்யன் 1 : குருநாதரே! ஒரு சந்தேகம். க்ரந்த ஆரம்பத்தில் இஷ்ட தேவதையை (அல்லது குருநாதரை) ஸ்துதி நமஸ்

காராதிகள் செய்துதான் க்ரந்தத்தை தொடங்குவது சிஷ்டர்களது வழக்கமல்லவா! இங்கே அப்படிச் செய்யவில்லையே! இது ஆதரிக்கத் தகுந்ததா?

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் : ஸ்துதியும், நமஸ்காரமும், மூன்று விதமாக இருக்கிறது. காயிகம், வாசிகம், மானஸம் என்று. இதன் ஆசிரியர் சிறந்த சிஷ்டர் ஆனதாலும் விக்னம் இல்லாமல் இந்த க்ரந்தம் நிறைவேறி இருப்பதாலும் இதன் ஆசிரியர் ஸ்துதி நமஸ்காரங்களை மானசீகமாக செய்திருக்கிறார் என்று தீர்மானித்துக் கொள்ளலாம்.

ஸனந்தனர் : அதுவும் தவிர ஜகத்குருவைக் கண்டவுடன் சாஷ்டாங்கமாக பாதங்களில் விழுந்து நமஸ்காரம் செய்த பிறகு தானே ஆசாரியர் கேள்விகேட்க இந்த ஸ்லோகங்களை பதிலாக சொல்லுகிறார். ஆகையால் காயிகமான நமஸ்காரமும் செய்ததாக ஆகிவிடுகிறது.

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் : இது சாதாரண விஷயம். இனி விரிவுரையை கேளுங்கள். சூரியன் உதித்து பிரகாசம் வந்தவுடன் ஜனங்கள் அவரவர்கள் காரியங்களைச் செய்கிறார்கள். அவர்களை அவன் வாக்காலோ, மனத்தாலோ, சரீரத்தாலோ தூண்டவில்லை. பிரகாசிக்கச் செய்வதன் மூலம் இந்த காரியங்களுக்குக் காரணமாக ஆகிறான். இதுபோலவே சித்ரூபியான ஆத்மாவின் சன்னிதியில் மனம் எண்ணுகிறது. கண் பார்க்கிறது. ஒவ்வொரு இந்திரியமும் அதனதன் தொழிலைச் செய்கிறது. இந்த முறையில் ஆத்மா காரண மாக ஆகிறார். ஆனால் ஆத்மா நேரிடையாக ஒன்றையும் தூண்டுவ தில்லை. இந்திரியங்களுடன் ஆத்மாவுக்கு எவ்விதமான தொடர்பும் கிடையாது. ஆகாசத்தைப்போல ஆத்மாவும் ஒருவித உபாதிகளும் இல்லாமல் பிரகாசிக்கிறார், புத்தி முதலான எல்லா உபாதிகளும் மறைந்து ஆத்மா-சைதன்யம்-சுத்தமாக ஆகாயம்போல் விளங்கு கிறார்.

சிஷ்யன் 1 : மனம், கண் முதலானவை செயல் படுவதற்கு நியாமகன் எதற்காக வேண்டும்? ஏன் அவைகள் தானாகவே செயல் படுவதில்லை?

சிஷ்யன் 2 : தவிரவும் நியமனம் செய்கிற ஆத்மா அழியாத ஞானஸ்வரூபன் என்பது எப்படி? உண்டான ஞானம் தன் காரியமான ஸம்ஸ்காரத்தாலோ, விரோதியான வேறு ஞானத் தாலோ அழிந்துவிடுமே! ஆகையால் ஞானம் நித்யமாக இருக்க

முடியாது. ஆத்மா நித்யம் என்று வைத்துக்கொண்டால் ஞானம் அழியும் தன்மை உள்ளதால், ஒன்றுக்கொன்று விரோதமானதால் நித்யமான வஸ்துவும், அனித்தியமான வஸ்துவும் ஒரே ஸ்வரூபமாக இருக்கமுடியாதே?

ஸ்ரீ சங்கர பகவத்பாதர்: ஸௌம்யர்களே! சாதுவான கேள்வி. உங்கள் சந்தேகங்களுக்கு, இரண்டாவது ச்லோகம் விடை கூறுகிறது. அதைக் கேளுங்கள்.

யமக்ந்யுஷ்ணவத் நித்ய போத ஸ்வரூபம்,
மனஸ் சக்ஷுராதீன்யபோதாத்மகானி!
ப்ரவர்தந்த ஆச்ரித்ய நிஷ்கம்ப மேகம்
ஸ நித்யோபலப்திஸ்வரூபோ஽ஹமாத்மா ||

முதலில் பொருள் கூறுகிறேன்.

நெருப்பின் சூடுபோல அழிவற்ற சைதன்ய வடிவமாய் சந்தேகமற்றதாய், ஒன்ருய் விளங்குகிறது ஆத்மா. அந்த ஆத்மாவை ஆச்ரயித்துக்கொண்டு ஞானமற்ற ஜட ஸ்வரூபமான மனம் முதலியவைகளும், கண் முதலியவைகளும் ப்ரவர்த்திக்கின்றன. அந்த அழிவற்ற ஞான வடிவமான ஆத்மா நானே. எப்படி அக்னியின் சூடு, அக்னியைக் காட்டிலும் வேறு இல்லையோ அக்னியிலுள்ள சூடு வேறு இடத்தில் காணப்படாதோ அப்போது அக்னியின் சூடு அதன் ஸ்வரூபமே என்று ஆகிறது. இதுபோல் சைதன்யமும் ஆத்மாவின் ஸ்வரூபமாகிறது. ச்ருதியும் அப்படியே சொல்லுகிறது. "அவயவம் இல்லாததாலும் எங்கும் இருப்பதாலும் அப்படியே அழியாத் தன்மை உள்ளதாலும் ப்ரஹ்மத்துக்கும், ஆகாசத்துக்கும் வேற்றுமை கிடையாது. ப்ருஹ்மத்திற்கு அதிகமாக(ஆகாசத்திற்கு இல்லாத)சைதன்யம் உள்ளது தவிரவும் அந்த இந்த ஆத்மாவிலிருந்து ஆகாசம் உண்டானது என்றும் ச்ருதி கூறுகிறது. ஆகையால் ஆத்மாவே மூவுலகங்களுக்கும் ஒரே காரணம் என்று ஆகிறது. ஆத்மாவுக்கு வேறு காரணம் எங்கும் கேள்விப்படவில்லை. எப்பொழுதும் இருப்பதாலும், காரணமற்று இருப்பதாலும், ஆத்மா அழிவற்ற ஸ்வரூபம் என்று சொன்னது ரொம்பவும் நியாயமானதுதான்.

சிஷ்யன் 1: என்னுடைய சந்தேகத்திற்கு விளக்கம் சொல்ல வேண்டுகிறேன், ஸ்வாமி!

ஸ்ரீ சங்கர பகவத்பாதர்: மனம், கண் முதலியவை செயல் படுவதற்கு நியமனம் செய்பவன் எதற்காக வேண்டப்படுகிறது? அவை

அவைகள் ஏன் தானுக செயல்படுகிறதில்லை? என்ற கேள்விக்கு ''அபோதாத்மகானி'' என்று பதில் சொல்கிருர். அதாவது சைதன்ய ஸ்வரூபமாக இல்லாதது என்று அர்த்தம். மனம், கண் முதலியவை குடம், கமண்டலம் முதலியவைபோல் அபோத ஸ்வரூபமாக — அசேதனமாக — ஜடமாக இருப்பதால் சேதனனுன நியாமகனை ஆச்ரயித்துத்தான் செயல்படுகின்றன. குடம் முதலியவைபோல அவனுல் அறியப்படுவதால் இவைகளும் அசேதனம் என்று சொல்லப்படுகிறது. வேதமும், ''இவனைக் காட்டிலும் வேருன பார்க்கிறவன் இல்லை'' என்று சொல்வதால் ஆத்மாவைக் காட்டிலும் வேருன வஸ்துவுக்கு சைதன்யம் மறுக்கப் படுகிறது. ஆகையால் சேதனனுன ஆத்மாவை ஆச்ரயித்துத்தான் எல்லாம் செயல்படுகின்றன. அந்த ஆத்மா நிஷ்கம்பம். அதாவது சந்தேகமற்றது. அது ஏகம். இரண்டாவது பொருள் அற்றது. ச்ருதியும், ''அந்த ஆத்மா அறியப்பட்ட பொழுது மனதிலுள்ள அத்யாசமாகிற முடிச்சு அறுந்து போகிறது. எல்லா சந்தேகங்களும் நீங்குகின்றன. இவனுடைய கர்மாக்கள் நாசமடைகின்றன'' என்று சொல்லுகின்றது. தேவர்கள், மிருகங்கள் முதலான எல்லா சரீரங்களிலும் ஆத்மா ஒன்றுதான். அந்த ஆத்மா நானே.

சிஷ்யன் 2: எனது சம்சயத்துக்கு விடைகூற பிரார்த்திக் கிறேன்.

ஸ்ரீசங்கர பகவத்பாதர் : போதம் என்பது சைதன்யம். ஞானம் சைதன்யம் அல்ல. உண்டாகிற ஞானம் அறியப் படுவதால் குடம் முதலியதுபோல் ஜடம்தான். எனக்கு குடத்தை பற்றிய அறிவு உண்டானது என்று நேராக அனுப விக்கப் படுவதால் அந்த ஞானம் அநித்யம். அது விருத்தி ஞானம். ஆனுல் ஆத்மா அழிவற்ற சைதன்ய ஸ்வரூபம்தான். அது காரணமற்றதாலும் நித்யம் ''நான் இருக்கிறேன்'' என்று அறிவதாலும் எப்போதும் உள்ளது. அது ரவியைப்போல் தானும் பிரகாசித்துக்கொண்டு ஜகத்தையும் பிரகாசப்படுத்து கிறது. ஆத்மாவின் பிரகாசத்தால்தான் உலகம் விளங்குகிறது. ''அந்த இந்த ஆத்மாவிலிருந்து ஆகாசம் உண்டானது'' என்று வேதம் கூறுகிறது. அதற்கு வேறு காரணம் கேள்விப்படவில்லை. ஆகையினுல் ஆத்மா அழிவற்ற சைதன்ய ஸ்வரூபம் என்பது பொருத்தமே.

பிரபாகரர் : ஸாங்கியர் முதலானவர்கள் ஆத்மா பலவாக இருக்கிறது என்று சொல்லுகிருர்களே! அது பொருத்தமானதாக தோன்றுகிறதே! ஏனென்ருல் ஆத்மா ஒன்ருனல் சுகதுக்கங்களின் கட்டுப்பாடு இருக்காது. அதாவது எல்லா சரீரங்களிலும் ஆத்மா ஒருவனுக இருப்பானேயானல் அப்பொழுது ஒருவன் சுகமாய் இருக்கும்பொழுது எல்லோரும் சுகமாய் இருக்கவேண்டும். ஒருவனுக்கு துக்கம் வந்தால் எல்லோருக்கும் துக்கம் வரவேண்டும். இதுபோல ஒருவன் அறியும்பொழுதோ, பிறக்கும்பொழுதோ இறக்கும்பொழுதோ கட்டுப்படும்பொழுதோ விடுபடும்பொழுதோ எல்லோரும் அறியவேண்டும், பிறக்கவேண்டும், இறக்கவேண்டும், கட்டுப்படவேண்டும், விடுபடவேண்டுமல்லவா? ஆனல் இம்மாதிரி இல்லையே. ஆகையால் ஆத்மா ஒருவனுக இருக்கமுடியாது.

ஸ்ரீசங்கர பகவத்பாதர் :— மகாவித்வானே! மூன்ருவது ச்லோகம் இதற்குப் பதில் அளிக்கிறது.

முகாபாஸகோ தர்பணே த்ருச்யமானோ
முகத்வாத் ப்ருதக்த்வேந நைவாஸ்தி வஸ்து ।
சிதாபாஸகோ தீஷு ஜீவோऽபி தத்வத்
ஸ நித்யோபலப்திஸ்வரூபோऽஹமாத்மா ॥

கண்ணுடியில் காணப்படுகிற முகத்தின் பிரதிபிம்பம் அந்த முகத்தைவிட வேருன தனி வஸ்துவாக இல்லவே இல்லை. அதுபோல புத்திகளில் பிரதிபலிக்கிற சைதன்யத்தின் பிரதிபிம்பமான ஜீவனும் அந்த சைதன்யத்தைக் காட்டிலும் வேருக இல்லை. அந்த நித்ய சைதன்ய ஸ்வரூபமான ஆத்மாவே நான். ஒரே முகத்தை பிம்பம், பிரதிபிம்பம் என்று இரண்டு வஸ்துவாக காட்டுகிற கண்ணுடி முகத்திற்கு உபாதியாம். பல கண்ணுடிகள் இருந்தால் ஒரே முகம் பல முகங்களாகத் தோன்றுகிறது, இது போல் புத்தி என்னும் உபாதி பலவாகவும், பலவாருகவும் இருப்பதால் பிம்பமான ஆத்மா ஒன்றே ஆனலும், பிரதிபிம்பங்களான ஜீவர்கள் பலவாகவும், பலவாருகவும் தோன்றுகிருர்கள். வேதமும் ''ஆத்மா ஒன்று'' என்று எடுத்துக் கூறுகிறது. ''ஏகமேவ அத்விதீயம் ப்ரஹ்ம'' என்று

ஸனந்தனர் : உபாதிகள் நியதமான ஸ்வரூபமுள்ளதாக இருப்பதால் ஆத்மா ஒன்று என்ற பக்ஷத்தில் சுகம்-துக்கம்

முதலானவைகளுக்கு கட்டுப்பாடான நிலைமை நன்ருக பொருந்து கிறது. உபாதிகளிலுள்ள அழுக்கு முதலான தர்மங்களால் பிரதி பிம்பங்களும் அழுக்கு முதலான தர்மங்கள் உள்ளவைகளாகத் தோன்றுகின்றன அவ்வளவுதான்.

ஸுரேசுவரர்: ஆத்மா பல என்ற பக்ஷத்திலோ சுகம் துக்கம் முதலியவைகளின் கட்டுப்பாடு பொருந்தாது. அதில் எல்லா ஆத்மாக்களும் எல்லா இடங்களிலும் இருப்பதால் அவைகளின் சமீபத்தில் உண்டாகும் சுகம்-துக்கம் முதலானவை தனிப்பட்ட காரணமில்லாததால் ஒருவனை மட்டும் சேர்ந்ததுதான் என்றும் அது எல்லோரையும் சேர்ந்ததல்ல என்றும் சொல்ல முடியாது. ஆகையினுல் ஆத்மா ஒன்றுதான் என்று சொன்னது ரொம்பவும் சரி.

சிஷ்யன் 1 : ஆத்மாவுக்கு சுகம்–துக்கம் முதலியவைகளின் தொடர்பு இல்லாததால் அவனுக்கு பந்தம் இல்லை அல்லவா! பந்தம் இல்லாததால் மோக்ஷம் இல்லையே. கட்டுப்பட்டவன்தானே விடுபடவேண்டும்.

சிஷ்யன் 2 : இப்படிப் பார்க்கும்போது சைதன்யத்தின் பிரதி பிம்பமான ஜீவனுக்கும் பந்தம் மோக்ஷம் இல்லை. பிரதி பிம்பம் உண்மைப் பொருள் இல்லாததால் அவனுடைய புத்தியும் நாசம் அடைவதால் அதற்கும் பந்த மோக்ஷங்கள் இல்லையே. ஆகையால் மோக்ஷ சாதனங்களை சொல்லுகிற சாஸ்திரங்களுக்கு என்ன பிரயோஜனம்? விபரமாக உபதேசிக்க வேண்டுகிறேன்.

ஸ்ரீ சங்கர பகவத்பாதர்: **ஸௌம்யர்களே! நன்ருக கவனித்து** வருகிறீர்கள். ரொம்பவும் சந்தோஷம். 4-வது ச்லோகத்திற்குப் பொருள் கூறுகிறேன். உங்கள் சந்தேகங்கள் விலகிவிடும்.

யதா தர்பணுபாவ ஆபாஸ ஹானௌ
முகம் வித்யதே கல்பநா ஹீனமேகம் ।
ததா தீவியோகே நிராபாஸகோ ய:
ஸ நித்யோபலப்தி ஸ்வரூபோ஽ஹமாத்மா ॥

கண்ணுடி இல்லாதபோது முகப் பிரதிபிம்பம் விலகிவிடுகிறது. அப்போது பொய் வஸ்துவற்றதாக முகம் ஒன்றே இருக்கிறது. அப்படியே புத்தி விலகினபோது பிரதிபிம்பமான ஜீவன் விலகி விடுகிறது. ஆத்மா ஒருவரே இருக்கிருர். அந்த அழியாத ஞான வடிவமான ஆத்மாவே நான்.

இனி விளக்க உரை கேளுங்கள்:

இந்த புத்தி முதலான பிரபஞ்சம் ஆத்மாவை அறியாததினுல் ஏற்பட்டிருக்கிறது, இது ஆவரணம். பிறகு புத்தி முதலியவற்றில் பிரதிபிம்ப ரூபமாக ஆத்மாவை ஆரோபித்து அவற்றிலுள்ள சுகம், துக்கம் முதலியவற்றை ஆத்மாவில் ஆரோபிக்கிருன். இது விக்ஷேபம். இந்த அத்யாசம்தான் பந்தம். புத்தியில் ஏற்படும் ஆத்மாவின் பிரதிபிம்பத்தை நான் என்று எண்ணுகிருன். புத்தியில் ஏற்படுகிற சுக-துக்கங்களை எல்லாம் பிரதிபிம்பமான தன்னிடத்தில் ஏற்படுகிறதாக எண்ணி கஷ்டப்படுகிருன். இதுதான் சம்சார பந்தம். இதற்கு மூலகாரணம் அஞ்ஞானம் புத்தி முதலான பிரபஞ்சம், புத்தியில் பிரதிபலிக்கும் சிதாபாசன். சுக-துக்க அனுபவம் ஏன்ற சம்சார பந்தம் எல்லாம் பொய்த் தோற்றமேதான். உண்மையாக இல்லவே இல்லை. எப்பொழுது நாம் சச்சிதானந்த ரூபமான ஆத்மா என்று பிம்பத்தை தெரிந்து கொள்கிறோமோ அப்பொழுது அஞ்ஞானம் விலகி விடுகிறது. ஆவரணம், விக்ஷேபம் என்ற இரு மாயா சக்திகளும் விலகி பிரபஞ்சம் தோன்றுவதில்லை. இதுதான் மோக்ஷம். அஞ்ஞானத் தால் ஏற்படுகிற பிரதிபிம்பம் ஞானத்தால் விலகிவிடுவதால் உண்மையில் ஆத்மாவுக்கு பந்தமில்லை, மோக்ஷமும் இல்லை. அஞ்ஞானத்தால் ஏற்பட்ட பந்தம் ஞானத்தால் விலகவேண்டும். அந்த அஞ்ஞானம் விலகுவதற்கு மோக்ஷ சாதனங்களை சொல்லுகிற சாஸ்திரங்கள் மிகவும் அவசியம்.

விஷ்ணு மித்திரர்: ஸத்குருவே! சிலர் புத்தி முதலியவை களையே ஆத்மா என்று சொல்லுகிருர்களே, அவர்களைக் குறித்துத் தங்கள் அபிப்ராயம் என்ன?

ஸ்ரீ சங்கர பகவத்பாதர்: மகாவித்வானே, 5-வது ச்லோகம் அதற்கு விடையாக இருக்கிறது.

மநஸ் சக்ஷுராதேர்வியுக்த: ஸ்வயம் யோ
மநஸ் சக்ஷுராதேர் மநஸ் சக்ஷுராதி: |
மநஸ் சக்ஷுராதே ரகம்ய ஸ்வரூப:
ஸ நித்யோபலப்தி ஸ்வரூபோऽஹமாத்மா ||

மனம், கண் முதலியவற்றிற்கு வேருனவராகவும்; மனம், கண் முதலியவற்ருல் அறியமுடியாதவராயும் இருக்கிருர் ஆத்மா, மனம்

கண் முதலியவற்றிற்கு மனம், கண் முதலியனவாகவும் அவரே விளங்குகிருர். புத்தி, இந்திரியம், சரீரம் இவைகளைக் காட்டிலும் வேருனவர், எங்கும் இருப்பவர், நாசமற்றவர். அவரே ஆத்மா. ஒவ்வொரு சரீரத்திலும் மனேவிருத்தி களினுல் வெவ்வேறு ஸ்வரூபம் உள்ளவராகத் தோன்றுகிருர்.

ஸுரேசுவரர் : மனதால் நினைக்கிருேம். கண்ணுல் பார்க்கிருேம். இவ்வாறு ஒவ்வொரு இந்திரியம், ஒவ்வொரு விஷயத்தை அறிகிறது. ஆனுல் கண்ணுல் ரூபத்தை பார்க்கலாமே தவிர ரூப ஞானத்தை அறிய முடியாது இதுபோலவே மற்ற இந்திரியங்களும் செயல்படுகின்றன. மனம், கண் முதலான இந்திரியங்களையும் அவற்றினுல் ஏற்படும் ஞானங்களையும் அறிவது ஆத்ம சைதன்யம். மேலும் கண் முதலியவை ஜடமானதால் அவைகளால் ஆத்மாவை அறியமுடியாது. அவைகளுக்கு பிரகாசப்படுத்துகிற சக்தியே ஆத்மாவிலிருந்துதான் கிடைக்கிறது. கண்ணுக்கு பார்க்கிற சக்தியை கொடுப்பதால் ஆத்மாவை கண்ணுக்கு கண் என்கிருர். இதுபோல் மற்ற இந்திரியங்களுக்கும் தெரிந்துகொள்ளவேண்டும். இந்த விபரம் கேனுேபநிஷத்தில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸனந்தனர் : வெளியிலுள்ள குடம் முதலானவைகளை பிரகாசப்படுத்துகிற மனம், கண், முதலியவைகள் அந்த குடம் முதலியவைகளைக் காட்டிலும் வேறுதானே ! அப்படியே உள்ளே இருக்கிற மனம், கண் முதலியவைகளை பிரகாசப்படுத்துகிற ஆத்மா அவைகளைக் காட்டிலும் வேறுபடுகிருர் என்று தீர்மானம் மனம் (புத்தி) கண் முதலியவை ஆத்மாவால் அறியப்படுகிறவையே என்பதால் அவைகள் ஆத்மா அல்ல என்று தீர்மானிக்கப்படுகிறது. அறிகிறவன், அறியப்படுகிறதை காட்டிலும் வேருனவன். ஆகையால் புத்தி முதலியவைகளை ஆத்மா என்று எண்ணுவது சரியல்ல.

பிரபாகரர் : ஸ்வாமி ! ஆத்மாவும் அறியப்படுகிறபடியால் அதுவும் அனுத்மா என்று ஆகிவிடாதோ ?

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் : அப்படி ஆகாது. ஆத்மா மனம், கண் முதலியவைகளால் அறியமுடியாத ஸ்வரூபமுள்ளவர், பிரகாச ஸ்வரூபர் என்று சொல்லப்படுகிறது. அவ்விதமே ச்ருதியும் ''வாக்குகள் மனதுடன்கூட எதை (எந்த ஆத்மாவை) அடையாமல் திரும்பிவிடுகிறது'' என்று கூறுகிறது.

சிஷ்யன் 1: மனம், கண் முதலியவைகளைக் கொண்டுதானே குடம், வஸ்த்ரம் முதலியவைகள் இருப்பதாக தீர்மானிக்கப்படுகிறது. மனம், கண் முதலியவற்ருல் ஆத்மா அறியப்படாதவராளுல் அவரை எப்படி அறிவது? அவரை அறிய வேறு பிரமாணமும் இல்லையே. அப்போது முயல் கொம்புபோல ஆத்மாவுக்கு ஸித்தியே ஏற்படாது. ஆத்மாவை அறிவிக்கிற பிரமாணம் இல்லாததால் ஆத்மா இல்லை என்றே ஆகிவிடும்.

ஸ்ரீசங்கர பகவத்பாதர்: அப்படி ஒருக்காலும் ஆகாது. பயப்பட வேண்டாம். 6-வது ச்லோகம் இதைத் தெளிவுபடுத்துகிறது.

ய ஏகோ விபாதி ஸ்வத: சுத்தசேதா:
ப்ரகாசஸ்வரூபோऽபி நாநேவ தீஷு ।
சராவோதகஸ்தோ யதா பாநுரேக:
ஸ நித்யோபலப்திஸ்வரூபோऽஹமாத்மா ॥

எவர் சுத்தமான மனம் உள்ளவராகவும், பிரகாச ஸ்வரூபராகவும் ஒருவராகவும் இருந்தபோதிலும் பலவிதமான புத்திகளில் வெவ்வேருக இருப்பவர்போல் தாளுகவே நன்கு பிரகாசிக்கிருரோ அந்த அழிவற்ற ஞான வடிவமான ஆத்மாவே நான். இதற்கு திருஷ்டாந்தம், பாத்திரங்களில் உள்ள ஜலங்களில் ஒரே சூரியன் தெரிவதுபோல ஆத்மா பிரமாணங்களை அபேக்ஷிக்காமல் தானே பிரசித்தர். இரண்டாவது வஸ்து அற்றவர். நன்கு பிரகாசிக்கிருர் தாளுகவே. வேருென்ருல் அல்ல. பரிசுத்தமான மனம் உள்ளவர் என்ருல் நிர்மலமான மனம் உள்ளவருக்குத்தான், ஆத்மா தாளுகவே விளங்குகிருர் என்று பொருள். ஆகையிளுல் வேதத்திலும் ''அந்த இந்த ஆத்மாவை தினமும் செய்யும் வேதாப்யாசத்தாலும், யக்ஞத் தாலும், தானத்தாலும், ஆசையை விலக்கி கிடைத்ததில் திருப்தி அடைவது என்ற தவத்திளுலும் பிராமணர்கள் அறிய விரும்பு கிருர்கள்'' என்று கூறப்படுகிறது.

ஸனந்தனர்: குடம், வஸ்த்ரம், முதலியவைகள் ஜடமாய் இருப்பதாலும் வேறு பிரகாசத்தை எதிர்பார்ப்பதாலும் தானே பிரகாசிக்கிறதில்லை. ஆத்மா பிரகாச ஸ்வரூபமாய் இருப்பதால் வேறு பிரகாசத்தை எதிர்பாராமல் சூரியன்போல் தானே பிரகாசிக்கிருர். எப்படி சூரியன் வேறு பிரகாசத்தை எதிர்பார்க்கிற தில்லையோ, ஆளுலும் பிரகாசிக்கிருனே அதுபோல ஆத்மாவும் பிரகாசிக்கிருர்.

சாண்டில்யர்: ஆத்மா ஒன்றுதான் என்றும், உபாதிகளான புத்திகள் அனேகம் என்றும் பல உபாதிகளினுல்தான் ஆத்மா பலவாகத் தோன்றுகிருர் என்றும் உண்மையில் ஆத்ம ஸ்வரூபம் ஒன்றுதான் என்றும் கூறப்பட்டது. ஒரே சமயத்தில் ஒரே ஆத்மா அநேக புத்திகளை எப்படி நியமனம் செய்கிருர்? ஒரே குதிரைப் பாகன் ஒரே சமயத்தில் பல குதிரைகளை அடக்கி ஆள்வதில்லையே. வரிசையாக ஒவ்வொன்ருக நியமனம் செய்வதைத்தானே காண்கிருேம். அது இங்கு இல்லை. ஒரே சமயத்தில் எல்லா புத்திகளும் தன் தன் காரியங்களில் ஈடுபடுவதை காண்கிருேம். ஆத்மாவால் ஏவப்படாமல் புத்திகள் தன் காரியங்களில் ஈடுபட முடியாது. ஆகையால் ஆத்மா ஒன்றல்ல. அநேகம்தான் என்று தீர்மானிப்பதே பொருத்தமாக இருக்கும்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர்: மகாவித்வானே! அப்படி அல்ல. 7வது ஸ்லோகம் திட்டவட்டமாக இதை மறுக்கிறது.

> யதாநேகசக்ஷு. ப்ரகாசோ ரவிர் ந
> க்ரமேண ப்ரகாசீகரோதி ப்ரகாச்யம் ।
> அநேகா தியோ யஸ் ததைக ப்ரபோத:
> ஸ நித்யோபலப்தி ஸ்வரூபோsஹமாத்மா ॥

பல கண்களுக்கு பிரகாசத்தை கொடுக்கிற சூரியன் வரிசையாக பிரகாசப்படுத்துகிறதில்லை. ஒரே சமயத்தில்தான் பிரகாசப்படுத்துகிருர். அப்படியே ஒரே சைதன்ய பிரகாசமாய் இருக்கிற ஆத்மாவும் அநேகமாய் இருக்கிற புத்திகளை வரிசையாக பிரகாசப் படுத்துகிறதில்லை. ஒரே சமயத்தில்தான் பிரகாசப் படுத்துகிருர் அந்த அழிவற்ற ஞானஸ்வரூபமான ஆத்மாவே நான். நாம் கண்ணுல் வஸ்துக்களை பார்க்கும்பொழுது சூரிய தேவதை தனது வெளிச்சத்தால் வஸ்துக்களை காட்டிக் கொடுக்கிருர். இங்கே வரிசையாக ஒவ்வொரு பிராணிக்கும் அநுக்ரஹம் செய்வதில்லை. ஒரே காலத்தில் எல்லோருக்கும் காட்டிக் கொடுக்கிருர். ஒரே சமயத்தில் அதே சூரியன் காலடி கிராமத்திலிருப்பவர்களுக்கும், சிருங்ககிரியில் இருப்பவர்களுக்கும் ஸ்ரீபலி அக்ரஹாரத்திலிருப்பவர்களுக்கும் மற்ற எல்லா இடங்களிலும் ஒரே சமயத்தில் எல்லா வஸ்துக்களையும் காட்டிக் கொடுக்கிருர். வரிசையாக காட்டிக் கொடுப்பதில்லை. இதுபோலவே புத்திகள் தனித்தனியாக வேவ்வேறு இடங்களில் இருந்த போதிலும் ஒரே சைதன்ய பிரகாசம் எங்கும் இருப்பதால் ஒரே சமயத்தில் எல்லா புத்திகளையும்

பிரகாசிக்கச் செய்கிறது குதிரைப் பாகனின் சரீரம் குறிப்பிட்ட ஒரு இடத்தில் மட்டும் தான் இருக்கிறது. ஆகையால் பல இடங்களில் உள்ள அநேக குதிரைகளை ஒரே சமயத்தில் அவனால் நியமனம் செய்ய முடியாது. அவன் வரிசையாகத்தான் செய்ய வேண்டும். ஆத்மாவுக்கு அப்படி அல்ல.

சிஷ்யர் 1 : சூரியனாலேயே எல்லா காரியங்களும் நடக்கும் பொழுது அவரே புத்திகளுக்கு பிரேரகனாக அதிஷ்டாதாவாக— இருக்கட்டுமே ''தியோ யோ ந: ப்ரசோதயாத்'' என்று வேதமும் கூறுகிறதே. ஆத்மாவைத் தனியாக ஒப்புக் கொள்வதால் என்ன பயன்? சந்தேகத்தை நிவர்த்திக்கவேண்டும், ஸ்வாமி!

ஸ்ரீ சங்கர பகவத் பாதர்: 8வது ஸ்லோகம் இந்த சந்தேகத்தை நிவர்த்தி செய்யும்.

விவஸ்வத் ப்ரபாதம் யதா ரூபமக்ஷம்
ப்ரக்ருஹ்ணாதி ந'பாத மேவம் விவஸ்வான் ।
யதாபாத ஆபாஸயத்யக்ஷ மேக:
ஸ நித்யோபலப்திஸ்வரூபோSஹமாத்மா ॥

கண்ணானது பகலவனால் ப்ரகாசிக்கப்பட்ட ரூபத்தை நன்றாக அறிகிறது. சூரியனால் பிரகாசிக்கப்படாத ரூபத்தை அறிவதில்லை. இந்தப்படி சூரியனும் எவரால் பிரகாசிக்கப்பட்டு நம்முடைய கண்ணை பிரகாசிக்கும்படி செய்கிறாரோ அந்த அழிவற்ற சைதன்ய வடிவமான ஆத்மாவே நான். நம்முடைய கண்ணுக்கு பார்க்கும் சக்தி நன்றாக இருந்த போதிலும் சூரிய வெளிச்சம் இல்லாத இருட்டில் குடம் முதலியதை பார்க்க முடியவில்லை, வெளிச்சம் இருந்தால்தான் பார்க்க முடிகிறது. சூரியன் தன் வெளிச்சத்தை பொருள்களில் செலுத்தி காட்டிக் கொடுக்கிறான். தவிரவும், வெளிச்சம் இருந்தால் மட்டும் போதாது, கண்ணுக்கு பார்க்கும் சக்தியும் இருக்கவேண்டும். சூரியனின் அனுக்ரஹத்தினால்தான் கண்ணுக்குப் பார்க்கும் சக்தி கிடைக்கிறது. ஆனால் அந்த சூரியனுக்கும் சொந்தமான பிரகாசம் கிடையாது. எப்படி கண்ணுக்கு சூரியன் அதிஷ்டாதாவாக இருக்கிறானோ, அப்படி சூரியனுக்குப் அதிஷ்டாதாவாக எவர் இருக்கிறாரோ அந்த ஆத்மாவே நான். ஆத்ம சைதன்ய பிரகாசத்தால்தான் சூரியனும் பிரகாசிக்கிறான். ஆத்ம சக்தியைக் கொண்டுதான் மற்ற பொருள்களையும் பிரகாசப் படுத்துகிறான். சூரியன் இருப்பதே ஆத்ம சைதன்ய சக்தியால்தான் தெரிகிறது.

ஸுரேசுவரர் : ஆத்மாவுக்கும் வேறொரு பிரகாசத்தின் உதவியைக்கொண்டுதானே ரவியை பிரகாசப்படுத்த வேண்டும் என்ருல் அல்ல. ஆத்மா தானே பிரகாசிப்பதால். ''பார்க்கிறவன் இவனைத்தவிர வேறு இல்லை'' என்று சுருதியும், ஆத்மாவைக் காட்டிலும் வேறு ஒன்று இருப்பதை மறுத்து இருக்கிறது. வேறு ஒன்றை ஒப்புக்கொண்டால் அனவஸ்தா (முடிவில்லாமை) என்ற தோஷமும் ஏற்படும்.

ஸனந்தனர் : கண்களுக்கும் ஆத்ம சைதன்யத்தால்தான் பார்க்கும் சக்தி கிடைக்கிறது ஆத்மா ஸ்வயம் பிரகாசமானதால் அது பிரகாசிக்க வேருெரு பிரகாசம் தேவையில்லை. ஆகவே கண் முதலான இந்திரியங்களுக்கும், புத்திக்கும் அறியும் சக்தியை கொடுத்து அதனதன் காரியங்களில் அவைகளை ஏவுவது ஆத்ம சைதன்யம்தான். சூரியன் அல்ல. ஆகவே சூரியனை ப்ரேரகனுக ஒப்புக்கொள்ள முடியாது.

ஸ்ரீசங்கரபகவத்பாதர்: மேலும் 9-வது ஸ்லோகத்தில் சூரியனை திருஷ்டாந்தமாக சொல்லுகிருர்.

யதா ஸூர்ய ஏகோப்ஸ்வநேகஸ் சலாஸு
ஸ்திராஸ்வப்யநந்வக் விபாவ்ய ஸ்வரூப;
சலாஸு ப்ரபிந்நாஸு தீஷ்வேவமேக:
ஸ நித்யோபலப்திஸ்வரூபோ஽ஹமாத்மா ||

சூரியன் சலிக்கின்றதும், சலியாததுமான ஜலங்களில் பலவாகத் தோன்றினுலும் உண்மையில் ஒருவராகவே இருக்கிருர். ஜலங்களை அனுசரித்து இருக்கவில்லை. இதுபோல சஞ்சலமாகவும், வெவ் வேருகவும் உள்ள புத்திகளில் பலவாகத் தோன்றினுலும் உண்மையில் ஆத்மா ஒருவராகவே இருக்கிருர். அந்த புத்திகளை அனுசரித்த ஸ்வரூபம் அற்றவராகவும் இருக்கிருர். அந்த அழிவற்ற ஞானவடிவமான ஆத்மாவே நான். முன் ஆருவது ஸ்லோகத்தில் கூறிய, ஆத்மா ஒன்றுதான், பல அல்ல என்ற கருத்தையே இங்கும் விளக்கமாக விவரிக்கிருர். ஆகாயத்தில் காணப்படும் சூரியன் தரையில் வைத்திருக்கும் பல பாத்திரங்களில் உள்ள ஜலத்தில் பிரதிபலிக்கின்ருன். ஒரு பாத்திரத்தில் உள்ள ஜலம் அசையும் போது அதில் தோன்றும் பிரதிபிம்பம் அசைகிறது, மற்ருெரு பாத்திரத்தில் உள்ள ஜலம் அசையாததினுல், அதில் காணும் பிரதி பிம்பம் அசைவதில்லை. இப்படி அநேகமாக இருப்பது, அசைவது

முதலான தர்மங்கள், ஜலத்தைச் சேர்ந்தவை. ஜலத்தில் காணும் பிரதிபிம்பங்களிலும் இவை காணப்படுகின்றன. ஆனால் ஆகாசத்தில் தோன்றும் உண்மையான சூரியனிடம் இவைகளை காணமுடியாது. அவன் எப்போதும் ஒருவனாகவும், ஒரேவித மாகவும்தான் இருக்கிறான். இதுபோல் புத்திகள்தான் பலவாக உள்ளன. காமம், கோபம் முதலான தர்மங்கள் புத்திகளைச் சேர்ந்தவை. புத்திகளின் தர்மங்கள் ஆத்மாவினிடத்தில் ஒட்டுவ தில்லை. ஆத்மா எப்பொழுதும் ஒருவராகவும், எத்தகைய தர்மங்கள் அற்றவராகவும் பிரகாசிக்கிறார். ஆத்மா ஒன்று என்று சொல்வதில் எவ்வித விரோதமும் இல்லை.

சிஷ்யர்: ஆத்மா ஞானஸ்வரூபரானால் நமக்கு ஏன் தெரிவ தில்லை? உலகில் எல்லோரும் துன்பப்படுகிறார்களே! கோபப் படுகிறார்களே. ஆசைப்படுகிறார்களே! அதற்கு என்ன காரணம்?

ஸ்ரீசங்கரபகவத்பாதர்: இந்த கேள்விக்கு சூர்யனையே திருஷ்டாந்தமாக் காட்டி 10-வது ஸ்லோகத்தில் பதில் சொல்லப் படுகிறது.

கநச்சந்நத்ருஷ்டிர் கநச்சந்நமர்கம்
யதா நிஷ்ப்ரபம் மந்யதே சாதிமூட: |
ததா பத்தவத் பாதி யோ மூடத்ருஷ்டே:
ஸ நித்யோபலப்திஸ்வரூபோzஹமாத்மா ||

மேகத்தால் மறைக்கப்பட்ட கண்பார்வை உடைய அதிமுட்டாளான ஒருவன் மேகத்தால் மறைக்கப்பட்ட சூரியனை பிரகாசமில்லாத வனாக நினைப்பதுபோல் மோகத்துடன்கூடிய ஒருவனுக்கு ஆத்மா கட்டுப்பட்டவர்போல் தோன்றுகிறார். அந்த அழிவற்ற ஞான வடிவமான ஆத்மாவே நான். ஆகாயத்தில் மழை காலத்தில் மேகம் வருகிறது. அது கண் பார்வையை மறைக்கிறது. சூரியனும் மறைக்கப்படுகிறதாக தோன்றுகிறது. அப்பொழுது வெளிச்சம் கண்ணுக்கு தெரிவதில்லை. ஆகையால் சூரியனுக்கு பிரகாசமே இல்லை என்று நினைப்பவன் முட்டாள்தானே. பெரிய பொருள்தான் சிறிய பொருளை மறைக்கமுடியும், மிகப்பெரிய சூரியனை மிகச்சிறிய மேகம் எப்படி மறைக்கமுடியும்? உண்மையில் மேகம் நம் கண்ணைத்தான் மறைக்கிறது, சூரியனை மறைக்கவில்லை. அதே ஊரில் வேறொரு இடத்திலிருந்து பார்ப்பவருக்கு சூரியன் ஒளியுடன் பிரகாசித்துக்கொண்டிருப்பது நன்றாக தெரியும். நம் கண்ணுக்கு எதிரே மேகம் வருவதால் சூரியனை தெரியவொட்டாமல் செய்கிறது.

தன் கண் மறைக்கப்பட்டிருப்பதை கவனியாமல் சூரியனை மேகம் மறைத்துவிட்டது என்று எண்ணுபவன் முட்டாள். சூரியனுக்கு பிரகாசம் மங்கிவிட்டது என்று எண்ணுபவன் அதிமுட்டாள். சூரியப் பிரகாசம் இருப்பதினுல்தான் நாம் மேகத்தையே பார்க்க முடிகிறது. சூரிய வெளிச்சம் இல்லாவிட்டால் நம் கண்ணுக்கு மேகமே தெரியாது. மேகம் தெரிவதை கொண்டே சூரியப்பிரகாசம் மங்காமல் இருப்பதை தீர்மானித்துக் கொள்ளலாம், இதே விதமாக அவித்தையால் மறைக்கப்பட்ட அறிவுடையவன் புத்தியையே ஆத்மா என்று எண்ணுகிருன். அதிலுள்ள துக்கம் முதலியவற்றை ஆத்மாவில் ஏற்றி பத்தனுக நினைக்கிருன். உண்மையில் சச்சிதானந்தமான ஆத்மாவுக்கு பந்தம் கிடையாது. புத்தியிலுள்ள ஜாட்டியம், துக்கம், கோபம், பந்தம் முதலியவைகளை ஆத்மாவில் ஏற்றி துன்பப்படுகிருன், இதற்கு அஞ்ஞானம்தான் காரணம். சுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தால் அஞ்ஞானம் விலகி பொய்யாக தோன்றிய பந்தமும் விலகிவிடும்.

சிஷ்யர்: ஸத்குருவே! புத்தியுடன் சேர்ந்தே இருக்கும் ஆத்மாவில் புத்தியிலுள்ள துக்கம் முதலியவை எப்படி வராமல் இருக்கும்?

ஸ்ரீ சங்கரபகவத்பாதர்: இதற்கு பதில் ஆகாச திருஷ்டாந்தத்தை காட்டி 11வது ஸ்லோகம் சமாதானம் கூறுகிறது,

ஸமஸ்தேஷு வஸ்துஷ்வநுஸ்யூதமேகம்
ஸமஸ்தானி வஸ்தூனி யம் ந ஸ்ப்ருசந்தி।
வியத்வத் ஸதா சுத்தமச்சஸ்வரூபம்
ஸ நித்யோபலப்தி ஸ்வரூபோzஹமாத்மா ॥

எல்லா வஸ்துக்களிலும் தொடர்ந்து ஊடுருவி ஒன்ருக இருக்கிறது ஆகாசம். அதுபோலவே ஆத்மாவும் சுத்தமாகவும் அழியாத ஸ்வரூபமாகவும் எங்கும் வியாபித்து எல்லா வஸ்துக்களாலும் தொடப்படாமலும் இருக்கிருர். அந்த அழிவற்ற ஞான வடிவமான ஆத்மாவே நான், புத்தியுடன் சேர்ந்தே இருக்கும் ஆத்மாவை புத்தியிலுள்ள துக்கம் முதலியவை ஸ்பரிசிக்காது. அதற்கு திருஷ்டாந்தம் ஆகாசமே ஆகும். ஆகாசம் ஸர்வ வியாபகம் எங்கும் உள்ளது. அது இல்லாத இடமே இல்லை. ஆகாசத்தில் தான் எல்லா பதார்த்தங்களும் உள்ளன. இருந்தபோதிலும் ஆகாசம் சுத்தமானதாலும், அசங்கமானதாலும் அதில் ஒரு பொருளும் ஒட்டுவதில்லை. ஆகாசம்போல ஆத்மாவும் ஸர்வ

வியாபகம், எல்லா பொருள்களிலும் ஆத்மா ஸத்ரூபமாக இருக்கிறார். ஆத்மாவும் ஆகாசம்போல சுத்தமாக இருக்கிறார் அசங்கமாயிருக்கிறார். ஆகையால் ஆத்மா எங்கும் இருந்தாலும் எந்தப் பொருளும் ஆத்மாவில் ஒட்டுவதில்லை.

ஸனந்தனர்: புத்தியும் அதிலுள்ள சுகம், துக்கம் முதலியவைகளும் ஆத்மாவில் ஒட்டுவதில்லை. உள்ளே எரிந்துகொண்டிருக்கும் ஒரு விளக்கைச் சுற்றி பல வர்ண கண்ணாடிக் கூண்டை வைத்துவிட்டால் தீபத்தின் ஒளி வர்ணக் கண்ணாடியில்பட்டு வெளியே பல வர்ணங்களில் ஒளி தெரியும். கண்ணாடியில் உள்ள வர்ணம் உள்ளே உள்ள தீப ஒளியுடன் சேருவதில்லை. இதுபோல் உள்ளே உள்ள ஆத்ம பிரகாசத்தால் புத்தி முதலியவை பிரகாசித்த போதிலும், அவைகளின் தர்மங்கள் ஆத்மாவில் ஒட்டுவதில்லை. ஆகையால் உண்மையில் ஆத்மாவுக்கு பந்தமே இல்லை.

விஷ்ணுமித்திரர்: ஸ்வாமி! ஆத்மா புத்திகளின் வேற்றுமையால் வெவ்வேறு விதமாக எப்படி இருக்க முடியும்? மேலும் புத்தியும் ஆத்மாவும் வெவ்வேருக இருந்தால் புத்தியைச் சேர்ந்த சுகம், துக்கம் முதலியவை ஆத்மாவில் எப்படித் தோன்றும் ?

ஸ்ரீ சங்கர பகவத் பாதர்: அன்பான சிஷ்யர்களே! இந்த 12வது ஸ்லோகத்துடன் ஹஸ்தாமலகீயம் நிறைவு பெறுகிறது. அதன் பொருளை கவனமாகக் கேளுங்கள். மகாவித்வானே! தங்களுக்கும் பதில் அதில் இருக்கிறது.

உபாதௌ யதா பேததா ஸன்மணீநாம்
ததா பேததா புத்திபேதேஷு தேऽபி ।
யதா சந்த்ரகாணும் ஜலே சஞ்சலத்வம்
ததா சஞ்சலத்வம் தவாபீஹ விஷ்ணோ ॥

உபாதி இருக்கும்பொழுது நல்ல ரத்னங்களுக்கு வேற்றுமை தோன்றுகிறது. அப்படியே உம்மிடம் வேற்றுமை தோன்றுகிறது ஜலத்தில் தோன்றும் சந்திர பிரதி பிம்பங்களுக்கு அசைவு தோன்றுவதுபோல் வியாபகமாக இருக்கும் உம்மிடம் இந்த புத்தியிலுள்ள சஞ்சலத்வம் தோன்றுகிறது. சுத்தமாக வெள்ளையாக இருக்கும் ஸ்படிகம் முதலிய நல்ல மணிகள் சிவப்பான பூவின் சமீபத்தில் சிவப்பாக தோன்றுகிறது. நீலநிற மலரின் சமீபத்தில் ஸ்படிகம் நீலமாக தோன்றுகிறது. இங்கு வெளுப்பான

ஸ்படிகமணி, வெவ்வேறு விதமான உபாதிகளால் வெவ்வேறுவித மாக பல நிறங்களில் காணப்படுகிறது. மலரும், மணியும் வெவ் வேருக இருந்தாலும் மலர்களின் நிறங்கள் மணியில் தெரிகிறது. இதுபோல் பலவிதமான புத்திகளாகிற உபாதிகளிலுள்ள தர்மங்கள் ஆத்மாவில் தோன்றுகின்றன. இதனுல் ஆத்மா பலவிதமாக தோன்றுகிறது. மலர்களின் நிறங்கள் ஸ்படிகத்தில் ஒட்டாமல் இருப்பதால் அது எப்போதும் வெண்மையாகவே இருக்கிறது. இதுபோல் புத்தியிலுள்ள தர்மங்கள் ஆத்மாவில் ஒட்டாததால் அது எப்பொழுதும் சுத்தமாகவே இருக்கிறது நிர்மலமான ஜலத்தில் பிரதிபலிக்கும் சந்திரன் காற்றினுல் அந்த ஜலம் அசையும்பொழுது, பிரதிபிம்பமான அந்தச் சந்திரனும் அசைவதாக தோன்றுகிறது, ஆனுல் பிம்பமான ஆகாசத்திலிருக்கும் சந்திரன் உண்மையில் அசைவதே இல்லே.

ஸுரேசுவரர்: நீ யார் என்ற கேள்விக்கு 11 ஸ்லோகங்களில் நான் நித்ய ஞானஸ்வரூபியாகிய ஆத்மா என்று விரிவாகக் கூறு கிருர் ஹஸ்தாமலகாசாரியார். கடைசியாக 12-வது ஸ்லோகத் தில் ஹே விஷ்ணுவே (எங்கும் நிறைந்தவரே) என்று ஜகத் குருவையே ஸம்போதனம்செய்து தங்களுக்கும் வேற்றுமை, சஞ்சலம் எல்லாம் உபாதியால் ஏற்பட்டவை என்று குருவையும், ஆத்ம ஸ்வரூபமாக கூறுகிருர். ஆகவே ஈச்வரன், குரு, நான் என்று மூன்றுவிதமாகத் தோன்றுவது ஒரே வஸ்துவான பிரஹ்ம சைதன்யம்தான். இது மட்டுமல்ல. ஆசார்யன் சிஷ்யன், பிதா புத்திரன், புருஷன் ஸ்திரீ, யஜமானன் வேலேக்காரன் முதலான வேற்றுமையும் தேஹம் முதலான உபாதிகளினுல்தான். அவர்கள் செய்யும் எல்லாக் காரியங்களும் தேஹத்தைச் சேர்ந் தவைதான். ஆகையால் தாங்கள் வேறு, நான் வேறு அல்ல. தாங்களும் நித்யஞானஸ்வரூப ஆத்மாதான். நம் இருவருக்கும் உபாதிகள் மூலம் வேற்றுமை தோன்றிய போதிலும் ஸ்வரூபத்தில் பேதம் இல்லே. நான் தாங்கள்தான், தாங்களும் நான்தான். எல்லோருமே வேற்றுமையற்ற பரிபூர்ண பிரஹ்ம சைதன்யம் தான் என்ற பரம ஸித்தாந்தத்தைக் கூறி முடிக்கிருர்.

ஸ்ரீசங்கரபகவத்பாதர்: அருமை சிஷ்யர்களே! இதுவரை கேட்டதின் பொருளே சுருக்கமாகக் கூறுங்கள். ஒரு விஷயத்தை குரு நன்ருக போதித்து சிஷ்யனும் விளக்கமாக அதை தெரிந்து

கொண்டான் என்றால், அதை அவன் மறுபடியும் தெளிவாகச் சொன்னால்தானே எல்லோருக்கும் திருப்தியாக இருக்கும். ஆகையால் நீங்கள் தெரிந்து கொண்டதை சுருக்கமாகச் சொல்லுங்கள். ஏதேனும் தவறுகள் இருந்தால் திருத்தலாம், பயப்படாமல் சங்கோசம் இல்லாமல் சொல்லுங்கள்.

சிஷ்யன் 1: ஸத்குருவே! என் சிற்றறிவுக்கு எட்டியவரை கூறுகிறேன். ஆசீர்வதியுங்கள் அழியாத மாருத, ஞானத்தை சொரூபமாக கொண்டது ஆத்மா. அதுவே நான். சூரியனில் பிரகாசம் போலவும், நெருப்பில் சூடு போலவும், ஆத்மாவில் ஞானம் (சைதன்யம்) நீங்காமல் எப்பொழுதும் இருக்கும். அந்தக் கரணமும், இந்திரியங்களும், சரீரம் முதலியவைகளும் ஜடம். அவைகள் ஆத்மா அல்ல. ஆத்ம சம்பந்தத்தால் சில சமயம் அவற்றில் ஞானம் தோன்றினாலும் நிலைத்து நிற்காது. அக்னியின் சேர்க்கையால் வென்னீரில் சூடு தோன்றினாலும். அது நீரைச் சேர்ந்ததல்ல.

சிஷ்யன் 2: புத்தி என்னும் உபாதி பலவாக இருப்பதால் ஒரே ஆத்மா பலவாக தோன்றுகிறது. கண்ணாடியில் தோன்றும் பிரதிபிம்பம், பிம்பத்தைக் காட்டிலும் வேறான தனிப்பொருள் அல்ல. கண்ணாடியை எடுத்து விட்டால் பிரதிபிம்பம் மறைந்து விடும். இதுபோல் புத்தியில் தோன்றும் பிரதிபிம்பமான ஜீவனும் பிம்பமான பிரஹ்மத்தை காட்டிலும் வேறல்ல. உபாதியான புத்தி நீங்கிவிட்டால் வேற்றுமை நீங்கி ஒரே பிம்பம் (பிருஹ்மம்) தான் மிஞ்சியிருக்கும்.

சிஷ்யன் 1: புத்தி முதலியவைகளுக்கும் அறியும் சக்தியை கொடுக்கிற ஆத்மாவை, அவைகளால் அறியமுடியாது. சூரியனும் ஆத்ம சைதன்ய சக்தியால்தான் பிரகாசித்துக் கொண்டு நமக்கும் கண்ணால் பார்க்க உதவி செய்கிறார். சூரியன் எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டிருந்த போதிலும், மழைகாலத்தில் மேகம் நம் கண்ணை மறைக்கும் பொழுது சூரியப்பிரகாசம் தெரிவதில்லை ஆனால் சூரிய வெளிச்சத்தால் தான் மேகம் இருப்பதை தெரிந்து கொள்கிறோம். இதுபோல் புத்தி முதலியவைகளை நாம் கவனித்துக் கொண்டு இருப்பதால் அவை ஆத்மாவை அறிய வொட்டாமல் செய்து விடுகின்றன. ஆனாலும் ஆத்மா பிரகாசிப்ப

தால்தான் அதன் உதவியைக் கொண்டுதான் புத்தி முதலியவை உலக வஸ்துக்களை அறிவிக்கின்றன.

சிஷ்யன் 2: சூரியன் பிராணிகள் செயல் படுவதற்கு காரணமாய் இருந்த போதிலும் அதில் ஒட்டுவதில்லை. அவைகளில் ஒட்டாமல் ஆகாசம் போல் அசங்கனுக இருக்கிருன். அதுபோல் ஆத்மாவும் அசங்கனுக இருக்கிருர். மனம், கண் முதலியவைகளால் அறியப்படாதவர் அவைகளுக்கே மனம், கண் முதலியவையாக இருப்பவர் ஆத்மா.

சிஷ்யன்: எல்லா வஸ்துக்களிலும் ஊடுருவி இருந்த போதிலும் அந்த வஸ்துக்களில் அசங்கனுக இருக்கிருர் ஆத்மா. பலவித உபாதிகளினுல்தான் பேதமே தோன்றுகிறது எல்லோரும் ஆத்ம சொரூபம்தான். சிஷ்யன், குரு, ஈஸ்வரன் என்ற வேற்றுமைகள் கூட உபாதிகளால் ஏற்பட்டவைதான். வாஸ்தவத்தில் ஆத்மா ஒன்றே உண்மைப் பொருள், அதுவே பிருஹ்மம்.

சிஷ்யன் 2: அந்த பரப்பிருஹ்மம், அறியப்பட்ட பொழுது எல்லா பதார்த்தங்களும் அறியப்பட்டதாக ஆகும். காரணமான மண்ணை அறிந்து விட்டால் அதன் காரியமான குடம், பானை முதலியவை அறியப்பட்டதாக ஆகிறது. அதுபோல் எல்லாவற்றிற்கும் மூலகாரணமான பரப்பிருஹ்மத்தை அறிந்துவிட்டால் மற்ற எல்லா வஸ்துக்களும் அறிந்தவையாக ஆகும்.

சிஷ்யன் 1: ஆசார்ய உபதேசத்தால் பிருஹ்மத்தை அறிந்து விட்டால் அஞ்ஞானம் விலகுகிறது. அப்பொழுது பிரபஞ்சமும் மறைந்து விடுகிறது. பிறவி மரணமற்ற பேரானந்த நிலையை அடையலாம். ஸத்குருவின் உபதேசத்தால் ஆத்மாவை அறிந்து கொண்டோம், என்றும் மனமார்ந்த நன்றி உள்ளவர்களாக இருப்போம், பாதாரவிந்தங்களில் பணிவான நமஸ்காரங்களைச் செய்கிறோம். (எல்லோரும் எழுந்து ஆசார்ய ஸ்வாமிகளை வணங்கி நிற்கிருர்கள் )

ஸ்ரீசங்கர பகவத் பாதர்: வத்ஸர்களே! மட்டற்ற மகிழ்ச்சி ரொம்ப நன்ருக புரிந்துகொண்டிருக்கிறீர்கள். தெரிந்ததை மிகத் தெளிவாகவும் எடுத்துச் சொல்லுகிறீர்கள் தவறு ஒன்று கூட இல்லை. பரிபூர்ண ஆசீர்வாதங்கள்.

ஸுரேசுவரர் : ஜகத்குருவே ! பிரபாகரரும். அவரைச் சேர்ந்தவர்களும் ஊருக்குப் போக விரும்புகிருர்கள். தங்கள் அனுமதியை வேண்டுகிருர்கள்.

ஸ்ரீசங்கரபகவத் பாதர் : அப்படியா! எல்லோரும் க்ஷேமமாய் போய் வாருங்கள். அடிக்கடி ஸ்ரீ ச்ருங்கேரிக்கு வந்து ஸ்ரீ சாரதாம்பாளை தரிசனம் செய்து போவது ச்ரேயஸை தரும். (எல்லோரையும் அருகில் அழைத்து தேங்காய், பழம் மங்களாட்சதை கொடுக்கிருர்கள்)

பிரபாகரரே! நாளை தினம் நல்ல நாள் பிரயாணம் புறப்படுவதற்கு. நாங்களும் நாளைய தினம் புரிஜகன்னுத்திற்கு. விஜய யாத்திரை போகப் போகிருேம் (ஸனந்தனரை பார்த்து) கோவிலில் எல்லாம் ஸித்தமாகிவிட்டதா? புறப்படலாமா?

ஸனந்தனர் : ஸ்வாமி! எல்லாம் ஸித்தமாகத்தான் இருக்கிறது. ஹஸ்தாமலகர் வந்தவுடன் புறப்பட வேண்டியது தான்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் : பிரபாகரரே ! தங்களுக்கெல்லாம் ஒரு மகிழ்ச்சியான செய்தி புரி ஜெகன்னுத்தில் இருக்கும் பூர்வ ஆம்னய பீடத்திற்கு அதிபதியாக ஹஸ்தாமலகரை நியமனம் செய்ய வேண்டும் என்று ஸ்ரீ சாரதாம்பாளுடைய உத்தரவு. அதன்படி இன்று கோவிலில் அபிஷேகம் நடக்கப் போகிறது. எல்லோரும் வந்து தரிசனம் செய்யவேண்டியது.

பிரபாகரர் : ஸ்வாமீ! தங்கள் சித்தம் எங்கள் பாக்கியம் (ஹஸ்தாமலகாசாரியார் எழுந்தருளி ஜகத்குருவுக்கு வணக்கம் செய்து வினயத்துடன் அருகில் நிற்கிருர்).

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் : மங்களானி பவந்து எல்லோரும் ஸ்ரீ சாரதாம்பாள் கோவிலுக்கு போய் வருவோம்.

(Turning Scene: காட்சி மாற்றம்) ஸ்ரீசாரதாம்பாள் கோவில் தென்படுகிறது. அம்பாளுக்கு எதிரே உயர்ந்த சிம்மாசனத்தில் ஹஸ்தாமலகாசார்யாள் வீற்றிருக்கிருர். ஜகத் குருவின் முன்னிலையில் அவருக்கு ஆசார்ய-பீடாதிபத்ய அபிஷேகம் நடக்கிறது. வேத கோஷம், மங்கள வாத்தியங்கள் முழங்குகின்றன. ஜய ஜய சங்கர! ஜகத்குருவுக்கு ஜே ! ஹஸ்தாமலகாச்சார்யாருக்கு ஜே ! என்ற கோஷங்கள் விண்ணைப் பிளக்கின்றன. ஸ்ரீசாரதாம்பாளுக்கு கற்பூர ஹாரத்தி நடைபெறுகிறது).

[திரை விழுகிறது — திரைக்கு பின்னுல்]

(''ஏஷா சங்கரபாரதீ விஜயதே நிர்வாண சௌக்ய ப்ரதா'' என்ற ஸ்லோகம் பாடப்படுகிறது.)

[ஹஸ்தாமலகீய நாடகம் முற்றும்]

சுபம்

## ॥ हस्तामलकीयम् ॥

—०—

निमित्तं मनश्चक्षुरादिप्रवृत्तौ
निरस्ताखिलोपाधिराकाशकल्पः ।
रविर्लोकचेष्टानिमित्तं यथा यः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ १ ॥

यमग्न्युष्णवत् नित्यबोधस्वरूपं
मनश्चक्षुरादीन्यबोधात्मकानि ।
प्रवर्तन्त आश्रित्य निष्कम्पमेकं
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ २ ॥

मुखाभासको दर्पणे दृश्यमानो
मुखत्वात् पृथक्त्वेन नैवास्ति वस्तु ।
चिदाभासको धीषु जीवोऽपि तद्वत्
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ३ ॥

यथा दर्पणाभाव आभासहानौ
मुखं विद्यते कल्पनाहीनमेकम् ।
तथा धीवियोगे निराभासको यः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ४ ॥

मनश्चक्षुरादेर्वियुक्तः स्वयं यो
मनश्चक्षुरादेर्मनश्चक्षुरादिः ।
मनश्चक्षुरादेरगम्यस्वरूपः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ५ ॥

य एको विभाति स्वतः शुद्धचेताः
प्रकाशस्वरूपोऽपि नानेव धीषु ।
शरावोदकस्थो यथा भानुरेकः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ६ ॥

यथाऽनेकचक्षुःप्रकाशो रविर्न
क्रमेण प्रकाशीकरोति प्रकाश्यम् ।
अनेका धियो यस्तथैकप्रबोधः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ७ ॥

विवस्वत्प्रभातं यथा रूपमक्षं
प्रगृह्णाति नाभातमेवं विवस्वान् ।
यदाभात आभासयत्यक्षमेकः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ८ ॥

यथा सूर्य एकोऽप्स्वनेकश्चलासु
स्थिरास्वप्यनन्वग्विभाव्यस्वरूपः ।
चलासु प्रभिन्नासु धीष्वेवमेकः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ९ ॥

घनच्छन्नदृष्टिर्घनच्छन्नमर्कं
यथा निष्प्रभं मन्यते चातिमूढः ।
तथा बद्धवद्भाति यो मूढदृष्टेः
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ १० ॥

समस्तेषु वस्तुष्वनुस्यूतमेकं
समस्तानि वस्तूनि यं न स्पृशन्ति ।
वियद्वत्सदा शुद्धमच्छस्वरूपं
स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥ ११ ॥

उपाधौ यथा भेदता सन्मणीनां
तथा भेदता बुद्धिभेदेषु तेऽपि ।
यथा चन्द्रकाणां जले चञ्चलत्वं
तथा चञ्चलत्वं तवापीह विष्णो ॥ १२ ॥



# நன்றியுரை



இந்நூல் வெளிவருவதற்கு ஆசீர்வாதமும், அருளாசிச் செய்தியும் அன்புடன் தந்துதவிய ஸத்குரு ஸ்ரீ ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களின் திவ்விய பாதார விந்தங்களுக்கு எனது உளங் கனிந்த பணிவான சாஷ்டாங்க நமஸ்காரங்களைத் தெரிவிக்கிறேன்.

இப்புத்தகம் அச்சாகும் போது புரூப் பார்த்தும் முன்னுரை எழுதித் தந்தும் பலவகைகளில் பேருதவி புரிந்த எனது மதிப்பிற்கும், அன்பிற்கும் உரிய வேதாந்த வித்வான் பிரும்மஸ்ரீ K. S. வெங்கிட்டராம சாஸ்திரிகள் அவர்களுக்கும் அணிந்துரை வழங்கிய அருமை நண்பர் புலவர் ப. சிகாகிரீசன் அவர்களுக்கும். விளம்பரங்கள் தந்து உதவிய நண்பர்களுக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்புத்தகத்தைப் படித்து எல்லோரும் நன்மை பெற இறைவனை இறைஞ்சுகின்றேன்.

**Dr. V. S. மணி அய்யர்**

கிருஷ்ணபுரம்
15-2-1984.

Sankar Printing Press, Madurai-1

Religion teaches discipline of the mind.

It is very difficult to perceive and comprehend the full implications of the advantages of this discipline. We need to know more, to be taught more and to be guided better to be able to achieve the fruits of such discipline. Very frequently we feel blessed because of our Prayers. Apart from this, it is more due to the discipline with which we approach both life and God that we feel happiness and are proud of ourselves.

With our respectful Pranams to Sri Hasthamalakachariar, to bestow on us all these for ever!